உ

கணபதி துணை.

# அநுபவரூபம்.

அறுசீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்.

முத்தியை மேவ நானிங்ஙன் முற்பட மேவி மொய்கழற்*
பத்தியை மேவ மேனிகொண்டு பத்தர்கள் சூழ வேபுகுந்*
தெத்தியெ னாவி வாரியுண்டு மெற்றுதி பேணு மீசனை *
யெத்தனை யூழி மாதவஞ்செய் திப்படி கான லாவதே(க)

தத்த மனேவி காரமென்று*தற்குண ராது வீடுறப்......*
புத்தக மோதி மாளுகின்ற புத்தர்முன் னை வாதிகள்....*
கத்தில் விழாத வாறுவந்து கைக்கொளு நாய னார்தமை *
யெத்தனை யூழி மாதவஞ்செய் திப்படி கான லாவதே(உ)

பொத்திய வூன மாகிவந்த புற்புத மாகி நானெனுது.....*
சத்திய ஞான மானவின்ப தத்துவ மாகு வானென.......*
வித்தக வேட மேவிவந்த மெய்க்குரு நாய னார்தமை ...*
யெத்தனை யூழி மாதவஞ்செய் திப்படி கான லாவதே(ங)

அத்தனை வேறி லாதெழுந் தத்தமி யாத சோதிசிற்.......*
சத்தென வேத மோதுதொந் தற்பொரு டானி தாமெனச்
சித்தநல் வேட மாகிவந்து செப்பிய நாய னார்தமை .....*
யெத்தனை யூழி மாதவஞ்செய் திப்படி கான லாவதே(ச)

சித்த விகார மாகிநின்று சிற்சட வேறு பாடுசெய்........*
பெத்தமும் வீடு மாய்மபங்கு பித்தது திரு மாறுசத்....*
சித்தென தாக மாகவொன்று செப்பிய தேசி கேசனை..*
யெத்தனை யூழி மாதவஞ்செய் திப்படி கான லாவதே(ரு)

* தன்னையுணராதென்பது - தற்குணராதெனவேற்றுமைமயங்கிற்று.

வித்தக மாக வேபரந்து மெய்ப்பொருள் போல மேநினி
சுத்தல மேவு மூதையம்பு கட்டழல் சோம சூரியர்........ ✻
சித்திய மான ஞநிவனந்த சித்திர காரி யார்தமை.......... ✻
யெத்தனை யூழி மாதவஞ்செய் திப்படி காண லாவதே(சு)

இத்தனை யோர்வு ருதநெஞ்சி விட்டிடை மாதர் பாலுற ✻
மத்தரின் விழு மாறுகண்டு வைத்தெணமாசில்சோதிமெய்த்
தத்துவ மாக வேதகஞ்செய் சற்குரு நாய னார்தமை...... ✻
யெத்தனை யூழி மாதவஞ்செய் திப்படி காண லாவதே(எ)

முத்தனை மூல நாடிவொன்றை முற்படு மாதி மூலனைச் ✻
சுத்தனை மேனி தானிதென் றுசுட்ட வொணாத சோதியைச்
சித்தனை வேறி லாவனந்த சிற்சுக லோக தாயிவை....... ✻
யெத்தனை யூழி மாதவஞ்செய் திப்படி காண லாவதே(அ)

ஒத்ததொவ் வாத தாயவலந்த வுற்பவ வேலை பாழ்பட.. ✻
நித்தமெய்ஞ் ஞான மாமனந்த நிற்குண தீர மேறிநற்... ✻
பத்தர்கள் பாடி யாடவந்த பத்ம(✻வி ராச) பாதனை..... ✻
யெத்தனை யூழி மாதவஞ்செய் திப்படி காண லாவதே(கூ)

தொத்தற மாடு வீடுமைந்தர் சுற்றமொ டாசை மாறிநற்
பத்திமெய்ஞ் ஞான மேவுசிந்தை பற்றிவிடாது மேவுகின்ற
வுத்தம சில ரோடும்வந்தெ னுச்சியின் மேவு பாதனை.. ✻
யெத்தனையூழிமாதவஞ்செய்திப்படிகாணலாவதே(௰)ஆ௱கூ௰

---

(✻விராசம்-ஒளி.)

அனுபவரூப முற்றிற்று.



உ

கணபதி துணை.

# உ சு - வ து.

# சிவப்பிரகாசஸ்வாமிகள்

## பிரார்த்தனை.

கட்டளைக் கலித்துறை.

ஊனா யுயிரா யுணர்வா யுருகிக் கரைந்தொழியாத்.........*
தேனாகி நின்றுதித் தித்திடு வாய்சிவ னேசிறியே..........*
னானா ருரோமஞ் சிலிர்ப்பவொண் கண்ணீ ரருவிதர........*
வானா துருக வடியே னுளமென் றணுகுவதே...........(க)

அணுவுக் கணுவா யகண்டமு மாயழி யாமுதலா.......... *
யுணர்வுக் குணர்வா யொழியாது நின்ற வுனை நினைந்து ..*
கணமுற்ற போது மமையாது கற்று வெனக்கதறி.........*
யிணையற் றழுது திரிதர வென்றெனக் செய்துவதே (உ)

துவந்துவ மாகி வருகின்ற பற்றுந் துடைத்தினிய...... ..*
நவந்திகழ் பாத நினைந்துள் ளுருகிநக் கோலமிட்டுக்......*
* கவந்தியுங் கையி லிடும்பலி யும்மன்றி யொன்றுமின்றி
யுவந்தடி யேனெய்த நீயரு ளாயெனக் குள்ளவனே...(ங)

உள்ளவ னேயொன்று மன்பரல் லார்கட் கொளித்துநின்ற
கள்ளவ னேயுன் கடைக்கண் படாதவர் போலடியே.....*
னள்ளலி லேநின் றழுந்தாத வண்ண மறிந்தடிமைக்.......*
கொள்ளவ னேகுர வாகோதி லானந்தக் கொள்கையனே*

கொள்ளும் பொருளனைத் தும்மழித் துக்குறையா நிறைவா
யுள்ளும் புறம்பு மொழியாது நின்றொளி ரும்முணர்வே *
யெள்ளும் பலியும்புறந்தின்னையுமன்றி யொன்றுமின்றி *
விள்ளும்படியருளாய்மெய்யருள்ளத்துமெய்ப்பொருளே.ரு

---

* கவந்தி - கோவணம்.

மெய்ப்பொரு ளேமெய் யடியார்கள் வாரிமுகந்துகொண்ட
கைப்பொரு ளேகலங் காவறி வேகலங் கும்மவர்க்குப்.... ※
பொய்ப்பொருளேயென்றன்புந்தியில்வந்துபுகுந்துநின்ற ※
செப்பொருளேசிறியேனறியேனென்கொல்செய்வதுவே. ௬

செய்வது செய்யாச் செயலது வாய்ச்சின மாசையென்னு
மையல நின்றி மறையறி யாத வடிவமதா.................. ※
யையம தேபண்ணி யார்க்கும் பரமன்றி யாருமின்றி..... ※
வையமெல் லாம்பித்த னூமனென் றேச வருவதென்றே. ௭

வருவதும் போவது மாய்வரு கின்ற வழக்கறுத்துப்..... ※
புரிவதுஞ் செய்தென்னை யாண்டுகொண் டாய்பரிபூரணனே
பரிவதுன்பாலன்றிப்பாவையர்மாட்டென்றன்பையுனெஞ்ச
திரிதரு கின்றதென் னேசிறியேன்செய்தநீவினையே (அ) [ந்

நீவினை யேன்சிறி யேனறி யேனென் றறிந்துகொண்டு ※
நீயெனை யாண்டன்று கொண்டதெனின் றுமந்நீபவையோ ※
நீவிடி லன்று பிடித்தவக் காடென தேயதன்றே ........ ※
நாயடி யேனறி யேனுடை யாய்நலந் தீமையுமே........(௯)

மேவிடு கின்ற பநிதன மோடேவை யும்வெறுத்துப்..... ※
※பாவிடு நூவிற் பரந்தெழு கின்ற பதைப்புமின்றி...... ※
போவிடு கின்ற கரணத்த னுயுள் விழித் துவனையே....... ※
யாய்விடு கின்றிடு நாளடி யேற்கென் றருள்வதுவே....(௰)

அருவது வேவடி வாகிப் புவியில்வந் தாண்டுகொண்டு.... ※
மருவது நீர மறவா நினையா வரமருளித் ...................... ※
தெருளது செய்த சிவப்பிர காசச் செழுங்கனியே......... ※
யருளது வேயுடை யாயழியாயிந்தவூனினையேல்கஆஉாசு

---

※பாவிடுநூவிபென்றம்பாடமுண்டு.

---

பிரார்த்தனை முற்றிற்று



உ

கணபதி துணை.

உரு - வது.

# சிவப்பிரகாசஸ்வாமிகள்

## அருணெறிவிளக்கம்.

அறுசீர்க்கழிநெடிலடி யிரட்டை ஆசிரியவிருத்தம்.

ஆரிய ஞர்திரு மேனியை யங்க ணணந்*திடு ..... மாகாதே
யண்டமு மாயையு மங்கழி யாவறி வாயிடு.........மாகாதே
காரிய காரண மான வுபாதி கழிந்திடு...............மாகாதே
கற்பனை முற்று மிறந்த பெருங்க ளிகைப்படு.....மாகாதே
பாரியல் பாகிய பந்த வினங்கள் பறிந்திடு .......மாகாதே
பாதக னேனை யுயக்கொள் பரன்கழல் பாடுது ..மாகாதே
யேரியல் பாகிய வின்பவெள் ளம்பெரி தெய்திடு மாகாதே
யெந்தை சிவப்பிரகாசனருட்கணெழிற்கடைபட்டிடினே(க)

அன்றென வாமென நின்றெழு சங்கை யழிந்திடு மாகாதே
யாசை யினங்க ளடங்க மடிந்தழி யாவிடு..... .....மாகாதே
சென்று பரந்தெழு சிந்தை திரிந்து தெளிந்திடு மாகாதே
தேவர்க ளும்மறை யுந்தெளி யாதமை திண்ணம தாகாதே
துன்றி வரும்பொறி யும்புல னுந்துக ளாய்விடு மாகாதே
துன்பமு மின்பமு மாகு பவங்க டொலைந்தன...வாகாதே
யென்று நிரந்தர வின்பம திங்ஙன மெய்திடு.....மாகாதே
யெந்தைசிவப்பிரகாசனருட்கணெழிற்கடைபட்டிடினே (உ)

தன்னழ காரடி யென்றவை மீது தழைப்பன......வாகாதே
தானல தேது மலாதமை நெஞ்சு தரித்திடு..... ....மாகாதே
பொன்னணி யாரடி யிற்பொடி யேயுடல் பூசுது மாகாதே
பூசுர ஞர்புர ணத்திரு மேனி பொலிந்திடு.........மாகாதே

* இடுதலுமெனப்படு-இடுமெனவிகாரமாயிற்று.

யுன்னிய பின்னுணராமையொளித்தமை யோர்வரிதாகாதே
யொன்றெனிலன்றியொழிந்துகழன்றதொரொண்பொருளாகாதே
யென்னை யென்னு ணர்கின்றதுதானுமிறந்ததி தாகாதே
யெந்தைசிவப்பிரகாசனருட்கணெழிற்கடைபட்டிடினே (ரு)

கற்பனை யானவை முற்றினி னுஞ்செல் கருத்தறுமாகாதே
கங்குல் கழிந்துணர் வாகிய நண்பகல் கண்ணுறு..மாகாதே
யற்ப மகத்துண ராமையில் வந்துள வானவை...யாகாதே
யங்கை யிலாமல் கக்கனி போல்வதொ ரற்புத.....மாகாதே
பற்பல வாயெழு முற்றும் வெறும்பரி பூரண....மாகாதே
பாவகமேது மிலாவுள மேவு பரம்பொரு......... ளாகாதே
யுற்பவ முற்று மொழித்த வருட்டிற*மோதுது மாகாதே
யொப்பில்சிவப்பிரகாசனருட்கணினுட்கடைபட்டிடினே(சு)

எவ்வயி னூழி யெலாம்வரு நாளென தேகிய.....தாகாதே
யென்பணியன்பருடன்கொளவெந்தை யிசைந்திடுமாகாதே
கவ்வை நெகுங்கனி செய்தெனை யாளு கணக்கிது வாகாதே
காதன்மெய் யன்பர் கருத்து மிகக்களிகூர்தரு.....மாகாதே
யவ்வி னுடன்பக லின்றி யருட்கட லாடுது..........மாகாதே
யண்ட மெலாமறி வாய்ந மகத்து ளடங்கிடு .......மாகாதே
சொல்ல திறந்த சுகக்கனி வாய் மகிழ் தாங்கிடு....மாகாதே
சோதிசிவப்பிரகாசன்விழிக்கடைதுன்னெனவைத்திடினேரு

சம்புவி னன்பத மெங்கு நிறைந்து ததும்பிடு... மாகாதே
தம்மையு ணுதவர் தம்மு ணிறைந்தது தாமய.....லாகாதே
கம்ப மெழுந்து கரங்கள் குவிந்துக ணீர்தரு .... மாகாதே
காரண னடி யார்நடு வெய்தல் *கடைப்படு.....மாகாதே
யும்பருமிம்பரு நின்றயரொண்பொருளுள்ளொளியாகாதே
யூழிதொ றூழி யெலாம்வருமாயையொழிந்திடு மாகாதே
யெம்பர மின்றி யிருந்தவி ழின்னரு ளெய்திடு மாகாதே
யெந்தைசிவப்பிரகாசனருட்கணெழிற்கடைபட்டிடினே (சு)

கன்றிவருஞ்சமயங்கள்பொய்ம்மாயைசெய்கற்பித மாகாதே
கல்வியெ னும்மவ லக்கவ லக்கடல் கைபறு.. ....மாகாதே

---

* ஓதுதுமென்பதும் - கடைப்படுதுமென்பதும் - ஓதுதுமெனவும் - கடைப்படு மெனவும்விகாரமாயின.

நன்றியு மன்றியு மாமலைவ் நாச மடைந்திடு........மாகாதே
நாமுமெய் யன்பர்தமக்கடிமைத்தொழினண்ணுதுமாகாதே
வென்று பகைத்திற மாயையும் வேரற வீசுது.....மாகாதே
வேண்டிய வாவினை யாடியு முத்தி விளைந்திடு. ..மாகாதே
யின்றித மும்மக மும்மறி வாகி யிலங்கிடு.... .... மாகாதே
யெந்தைசிவப்பிரகாசனருட்கணெழிற்கடைபட்டிடினே (௭)

பாடிய நான்மறை யீறுரைவி நின்று பவணத்திடு மாகாதே
பாவக மேது மிலாவுள மேவு பரம்பொரு........ளாகாதே
கூடிய சாதி குலங்கள் குணங்கள் குலைந்திடு .. ....மாகாதே
கோரணி யாகிய கோமுழு தின்குடி கேடிது.......வாகாதே
தேடிய தாமல தின்றி யிருந்து திகைப்புறு...... மாகாதே
தேவர்க ளுஞ்சக முந்தெளி யாதமை தின்னம ...தாகாதே
பேடியல் செங்க மலப்பத மென்றலை யெய்துவ தாகாதே
யெந்தைசிவப்பிரகாசனருட்கணெழிற்கடைபட்டிடினே (௮)

புண்ணிய பாவ வினைத்தளை யும்பொடியாய்விடு மாகாதே
போக மெலாமினி மெய்யடி யார்கள் புணர்ச்சிய தாகாதே
பெண்ணவி யானவை யன்றி யிருந்துளபேரொழி லாகாதே
பேயவை யேவையு மாளவிசைந்தபெருந்தன்மை யாகாதே
விண்ணவர் தேடட மேதினி மேல்வரும் விச்சைய னாகாதே
மேவரும் வேத விழுப்பொருள்வந்துவெளிப்படு மாகாதே
யெண்ண மெலாமடி யாரடியேவிட லென்றெழு மாகாதே
யெந்தைசிவப்பிரகாசனருட்கணெழிற்கடைபட்டிடினே (௯)

அருக்க ருருத்திர ரிந்திரன் மாலய னுமவ..... ......ராகாதே
யலக்க ணுறக்கொடி யேவையு மாட லருட்கழ....லாகாதே
திருக்கறி னும்முறி னுஞ்சிவ மாய்விடல் திண்ணம தாகாதே
தேசிக னரரு ளின்பெரு மைத்திற மாவதி.........தாகாதே
யுருக்கி யுருக்கி யுளத்தை யழித்தமு தூறிடு.......மாகாதே
யோதறியேனுடையாய்முறையோவெனவோதுது மாகாதே
யிருக்கை தனக்கிய லிப்படி யாகி யிருக்கும........தாகாதே
யெந்தைசிவப்பிரகாசனருட்கணெழிற்கடைபட்டிடினே (௰)

அருணெறிவிளக்கமுற்றிற்று. ஆக ௨௱௰௯.

உ

கணபதிதுணை.

உசா-வத்,குயில்.

இஃது.

ஸ்வரூபானந்தஸ்வாமிகள்

# சிவப்பிரகாசஸ்வாமிகளது.

அறுசீர்க்கழிநெடிலடிஆசிரியவிருத்தம்.

மேலை யமரர்க்கு மேலாம் விண்ணவன் மண்ணி விழிந்தா ※
மாலையுங் காலையு மில்லா வகையென் றலைமிசை வைத்த
காலை யருணற் கடந்த காலுடை யானையென் கண்ணைச் ※
சோலையில் வாழுங் குயிலே சுரூபனை நீவரக் கூவாய் (௧)

அச்சந்த மாலு மயனு மல்லா தவரு மறியா................※
ரிச்சந்த மென்று மறையு மியம்புவ தொன்றென வென்ற
னுச்சந் தலைமிசை யேதன் றெண்மலர்ப் பாதங்கள் சூட்டி
யச்சந் தவிர்த்தெனை யாண்ட வழகனை நீவரக் கூவாய் (௨

முத்திக் கரசென்று தன்னை மூவாத மூவருந் தேட.... ※
வெத்திக்கடையேனை யாண்டிங்கிர்த்தெனை யென்பூடுருக்கிப்
புத்திக்கும் வாக்குக்கு மென்னைப் புலன்களுக் கும்புல மாகித்
தித்திக்கு மின்னமிர் தத்தைச் சிவப்பிர காசனைக் கூவாய் (௩)

சாத்திரஞ் சற்றுப் பிதற்றித் தமையுண ராதவ ரோடே ※
காத்திர மேவடி வாகிக் கழிந்து விடக்கட வேனைப்......※
பாத்திரஞ் செப்பழ வேதம் பன்னும் பரம பதத்தை.....※
மாத்திரை யொன்றின் வழங்கும் வள்ளலை நீவரக் கூவாய் (௪)

ஓதி யுணரப் படாத வொன்றென் றுபநிட மோது......❊
மாதியு மந்தமு மில்லா வானந்த நாட னருளால்.........❊
வேதிய வேடம் புனைந்தென் விரகை யழிந்த விரகன்...❊
கோதிக் கனியுண் குயிலே குருபர னைவரக் கூவாய்....(ரு)

மரித்தல் பிறந்த லிலாத மாசறு சோதியை நீயென்.....❊
றெருத்தவ மாற்றம தாக வுபநிடத் தோதி விடாதே...❊
யிருத்தியீ திப்பரி சென்ன வின்ப வெள்ளத்தெனை யிட்ட
திருத்தனை யாவையு மான நிமலனை நீவரக் கூவாய். (சா)

காலமு ஞாலமும் விண்ணுங் காலுங் கனலும் புனலுந் ❊
தூலமுநேர்மையுமாகிச்சொல்லும்பொருண்முற்றுமல்லான்
கோலங் கொடுவந் தடியேன் குடிமுழு தாண்ட குழகன்❊
நீலநிறக் குயிற் பிள்ளாய் நிமலனை நீவரக் கூவாய்...(எ)

சுந்த மலர்ப்பொழி லேறுங் கனியுண்டு வாழுங் குயிலே❊
தொந்த வினையறநோக்கித்துணையடியென்றலைவைத்துச்❊
சந்தமிதுவென்ன வொண்ணுத் தன்னை யெனக்கருள் செய்த
பந்தமும் விடு மிலாத பரஞ்சுடரை வரக் கூவாய்......(அ)

❊சோத்த முனக்குக் குயிலே சுராதிபர் நின்று துவல...❊
வூத்தை யுடம்பர வாகி யூதாரி யாயழி வேற்கு.............❊
மோத்தின்முடிவுரைத்தற்குமுன்னவுமொண்ணுதவொன்றை
வார்த்தையொன்றுலேபளிக்கும் வல்லபனை வரக்கூவாய் (கூ)

பொன்னலர் சோலைக் குயிலே புத்தேளிர் பொன்னடி கூட
வின்னலங் கெய்தவிம் மண்ணிலேழையேன் றன்னுள் புகுந்த
கன்னலைத் தேனை யமிர்தைக் கனியைப் பிறவிக் கடுவை❊
யென்னலங்கொண்டபிரானை யிறைவனை நீவரக்கூவாய் (ய)

முன்னுன் மறைபின் முடிவு மொழியுமுழுமுத றன்னைத்
துன்னுக வென்னை யுவந்து தாளினை யென்றலை தந்த❊

❊சோத்தம் - அஞ்சலிபத்தனம்.

வென்றுயசனேயென்கண்ணேயென்றுயிர்க்கின்னமிர் தத்தைப்
பொன்றுன வாயாற் குயிலே புண்ணியனை வரக் கூவாய்(௰௧)

சுந்தர நீல நிறத்துச் சோலையில் வாழுங் குயிலே........※
யிந்திர சாலம தென்ன யாவையுங் காட்டி மறைப்பா...※
வந்தர நாடுபுல் லென்ன வவனியில் மானிட ஞெ.... ....※
யெந்தர மாறு விசைந்த வின்னமிர் தைவரக் கூவாய்(௰௨)

தன்றுடைச் சோதியிற் றுஞ்சல் பிறப்பற விந்தச்சகத்தே
மிஃவிடை யாளொடுங் கூடி வேதிய வேடத்தின் வந்து※
பொன்னடி சூட்டியென் றுள்ளே பூரணவானந்த மாக்கி※
யென்னிடர் தீர்த்தபிராணை யிலங்குயிலேவரக்கூவாய்(௰௩)

ஆ பாடல் - ௨௨௩.

---

குயில் - முற்றிற்று.







## உஎ-வது,

# அன்னைப்பத்து.

கலிவிருத்தம்.

தனியி லிருந்தித் தமைத்தந்த நாத..................*
ரினிய படியென்று னன்னே யென்னு....................*
மினியவர்க் கொப்பது மின்னமிர் தாம்பால்................*
கனியுள தன்றுகா ணன்னே யென்னும்.....................(க)

அச்ச மறுத்திங் கடிதவை வைத்தவர்......................*
நிச்சம் புதியர்கா ணன்னே யென்னு ......................*
நிச்சம் புதிய நிமல னருளிணை..........................*
யிச்சந்த மென்னவோ வன்னே யென்னும்..................(உ)

தோற்றுவ தெல்லாஞ் சுரூபமாய்த் தோற்றவோர்..........*
மாற்ற மருளினு ரன்னே யென்னு.........................*
மாற்ற மருளிய வல்லபங் கண்டெனக்.......................*
காற்றவொன் றுதுகா ணன்னே யென்னும்..................(௩)

நாரா யணனய னுடரி தானவர்..............................*
வாராது வந்தார்கா ணன்னே யென்னும்....................*
வாராது வந்தென்னை வாழ்வித்த நாயனுர்.................*
சீரா ருளென்னே யன்னே யென்னும்.......................(௪)

விண்ணுதி தோன்று விழியளித் தாண்டது...................*
மெண்ணு திருவென்று ரன்னே யென்னு......................*
மெண்ணு திருந்த வியல்பை யிதுவென்ன...................*
வொண்ணு துரைக்கவு மன்னே யென்னும்...................(௫)

ஏகமாய் நின்றானை யிங்கிரண் டென்பவர்......................*
மோக மணைவர்கா ணன்னே யென்று..............................*
மோக மணைவனோன் றெங்கள் முதல்வனா........................*
ராகமஞ் சொன்னார்கா ணன்னே யென்னும்.................(௬)

தற்பதந் தொம்பதந் தாமாய வப்பத..............................*
மிப்பத மானவ ரன்னே யென்று.....................................*
மிப்பத மாய வியல்பை யிதுவென்று..............................*
செப்ப முடியுமோ வன்னே யென்றும்.......................(௭)

ஊனா யுயிரா யுணர்வா யழிவேணாத்..............................*
தானாக வாண்டவா றன்னே யென்றுந்..............................*
தானாக வாண்ட தகைமை நினைதோறு..............................*
மாறா தருகுமா லன்னே யென்றும்............................(௮)

இரண்டடியாயிற்றடிமிக்குவந்த
கலித்தாழிசை.

வேண்டிய வாவிளை யாடிட விடலித்..............................*
தாண்ட வருளென்னே யன்னே யென்று..............................*
மாதி யருளென்னே யன்னே யென்னும்.......................(௯)

செய்யாமை யுஞ்செய திம்மறுத் தாண்டவா.......................*
வையா வதிசய மன்னே யென்று......................................*
மழியா வதிசய மன்னே யென்னும், ௰-ஆ பாடல்-௨௱௬௰.

---

அன்னைப்பத்து முற்றிற்று.





---

## உ அ-வ து.

# ஸ்வரூபானந்தஸ்வாமிகள்

## சிவப்பிரகாசஸ்வாமிகள்.

## அடியவர்திறத்துநிந்தாஸ்துதி.

அறுசீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்.

காயமா விகைய துண்டு மூவர்கா தவிக ளுண்டு............⁕
வாயல்காப் பறிவு முண்டு வரம்படு சமைத மாதி........⁕
யாயநற் சுற்ற முண்டங் கடக்கரும் பொருளு முண்டு .⁕
தூயநற் சுருபா னந்தன் றுேண்டர்க டுறந்ததென்னே (க)

அன்பர்பா லார்வ முண்டங் கரும்பவச் செற்ற முண்டு...⁕
வன்பதார் விஷயந் தன்மேன் மாறிடாக் குரோத முண்டு⁕
முன்புறப் பக்க மேல்கிழ் முழுதுமா நிறியு முண்டு......⁕
துன்பமில் சுருபா னந்தன் றுேண்டர்கடுறந்ததென்னே(உ)

ஒன்றுேடுங் கலந்தி ராத வுறவின்மை பெரிது முண்டு...⁕
பொன்றினு மசைவு றாத முரண்வலி புகலி லுண்டு......⁕
கன்றிடும் வயிரி யோடுங் கலக்கமி லன்புண் டென்றுற்.⁕
றுன்றருட் சுருபா னந்தன்றுேண்டர்கடுறந்ததென்னே(ங)

கல்லுறு சிந்தை யெல்லாங் கரைக்கும்வல் லபமு முண்டு
வல்லவர்க் கொருகா லத்து மிரங்கிடா மறமு முண்டங் ..⁕
கெல்லையற் றிடுமி ரக்க மிறையொடு மிகவுண் டென்றுற்
றெல்லைநற் சிவப்ர காசன் றுேண்டர்கடுறந்ததென்னே (ச)

முன்பினு மவைவு நீர மொழிதரு விரக துண்டு.... .....⁕
நன்கொடு தீங்கு காணு ஞானமாஞ் செருக்கு முண்டு.....⁕

# அச அடியவர் திறத்து நிந்தாஸ்துதி.

வன்புறு துன்பம் வந்தால் மயக்கமில் களிப்ப துண்டு *
துன்பமில் சுரூபா னந்தன்றொண்டர்கடுறந்ததென்னே (௫)

கோத்தவை குலைத்து மேலாங் குணமின்மை பெரிது முண்டு
பார்த்தவ ருயிர்கள் ளுலே வாங்குபண் பின்மை யுண்டங்
கேத்துறு மேழை கட்கே யெளிவரு மியல்புண் டென்று *
லாத்தனன் சுரூபா னந்த னன்பர்க டுறந்த தென்னே (௬)

உலகியல் புருவு ணர்ந்த வுன்மத்த மிகவு முண்டு.........*
தலைவன தருள தன்றித் தனிப்பரும் பித்து முண்டு....*
மலைவுறு பகுதி போந்து வாதனை மாண்ட துண்டு.....*
நிலையுடைச் சுரூபா னந்த னேசர்க டுறந்த தென்னே (௭)

தன்னினு மிறைவ னன்பர் தமைவிடாப் பாச முண்டு.....*
நன்னினு மிதரர் தம்மை நணுகிடாத் துவேஷ முண்டு. *
துன்னும்வன் னெஞ்ச வஞ்சர்க் கருளிடாச் சோர முண்டாற்
றென்னுநற் சுரூபா னந்தன் சித்தர்க டுறந்ததென்னே (௮)

* எத்தினர்க் கருத்தே செய்தங் கெளிவரு மிச்சை யுண்டு*
தோத்திரச் சூழ அற்றுச் சுழலும்வன் பற்று முண்டு...*
சாத்திரப் பேய்க ளுக்குச் சலனஞ்செய் தவறுண் டென்றுற்
றீத்தனற் சுரூபா னந்தன் சித்தர்க டுறந்த தென்னே (௯)

கலையில்பே ரின்பத் தாராக் காமுகர் விஷய கோப.......*
ருலையறுபொருடம்முள்ளேயொளித்துப்பேணிடுமுலோபர்
முரிவில் பேரின்பத் நிசன் வயமுயிர் காணுமோகர்.......*
நிலையுமெம் மதமுந் தாமா நிமலர்க டுறந்ததென்னே (௰)

வரும்பவத் தாருச் சிற்ற மாச்சரி யத்தர் தன்னைத்.......*
தருங்குரு பரன்று லன்றித் தாழ்ந்திடாத் தெம்பர் நிரா*
வரும்பவ நாச னெங்கட் குண்டெனு மகங்காரத்தர்.......*
பரம்புமா யாபை சூன்ய பண்பினர் துறந்ததென்னே (௰௧)

---

* எத்தினர்க்கருத்தென விசைநோக்கியிருந்தது.

நிலவருட் பொறையர் நேநி நேநியே நிருப கத்தாற்.....⁕
குலவுறு நற்சந் தோஷர் குருபரன் முழுது மென்னச்...⁕
சொலிதையுற் றிடும்வி வேகர் தோய்வெறி ரிக்த்த சாந்தர்
தோஷவில்சித்தவிரோதத்தர் தூயவர்துறந்ததென்னே(௯உ)

உற்றவா ரோபி தங்க ளொழிந்தவா றுதரு மாமான்....⁕
முற்றுமாய் மொழியி றந்து முடிந்தமோ னத்த ராமாற்
பற்றுவீ டின்றி நின்ற பராமிர்தா னந்தர் தாமாற்......⁕
றுற்றசிர்ச்சுருபானந்தன்றெண்டர்கடுறந்ததென்னே. (௯௩)

சுட்டிய வெவையுந் தாமாய்த் துறக்கவேறென்றின்றுனவ்
விட்டதும் விடாது மன்றி வேதமோர் நான்கும்பேணப்⁕
பட்டிடு மளவு மல்லாப் பரம்பரன் சுருபா னந்தன்......⁕
சிட்டர்கடுறந்தாரென்னும்வார்த்தையுஞ்சிறப்பதன்றே(௯௪)

ஆ. பாடல் - உ௯௩.

---

அடியவர்திறத்து நிந்தாஸ்துதி முற்றிற்று.



உ

கணபதி துணை.

உகூ-வது,

# நெஞ்சிற்கறைவுரை.

நேரிசைவெண்பா.

உப்பகன்ற நீர்க்கூழு முண்டாற் பசிகெடுமா.. .... ........※
லிப்பதுண்டு கூவல்குலை மாறதனி - லிப்படியைப்......... ※
பார்த்தமையாப் நெஞ்சே பரந்தெழுந்து சென்றாலும் ..※
பேர்த்துலை நின் மேல்வருமோ பேறு........ ................(க)

பல்காய நற்கறியும் பானெய்ப்பழத் தோடடிசில் ............※
செல்வாய தேசஞ் செறிந்தாலு - மெல்லவுணா............ ※
வூட்டாவூ ழுண்டே லுறுபிணிமற் றியாதொன்றால்.......※
விட்டாதோ நெஞ்சே விரைந்து..............................(உ)

நல்ல வறுசுவைதா னாக்கினுனி மாத்திரமே..................※
யெல்லை யிருவிரலே யல்லதிலை - மெல்ல .................. ※
விருவிரலைத் தான்கடக்க மாட்டாதே நெஞ்சே........... ..※
பொருகடலைத் தான்கடப்பாய் போய். .......... ..........(௩)

ஆடை யழகினைநன் காதரித்தே யாங்கதற்கென் ............※
றோடி யுறுபொருளுக் குற்றுழன்றாய் - கூடியதேல்.......※
வண்ணா னெலிமருவார் வைப்பிடமற் றின்னவற்றா.... ....※
லென்னாயோ நெஞ்சே யிடர்.... .. .............. ..............(௪)

கந்தையொடு வெண்ணீறு கன்முழைபாழ்க் கோயில்பல※
முந்தையுறை சித முறுமென்னில் - வெந்துயரக்............ ※
கோடையினிற் கோவணமுங் கூடமிகை யித்தனைகா .... ※
னாடையினிற் காரியந்தா னெங்கு..............................(௫)

நீயா யமையாய் நினைந்தோடிக் கிட்டாமை ※
யேயா வமைந்தா யிடர்நெஞ்சே - சாயோ ※
கடையானார் காய்ப்பசிக்கே கால்குலைவர் கற்றோ ※
ரடையாரோ வாங்கமைவின் பால் (சு)

அமையாதே பெற்றதனை லாங்காங்கு நன்றென் ※
றிமையா தெழுந்தோடு கின்றாய் - சமையாச் ※
சிறுமைக்கு வித்ததுவா ந் தேறாய் மனனே ※
மறுமைக்கு மஃதே மறைப்பு (எ)

ஆற்றங் கரைப்பசுத்தா னக்கரையோ டிக்கரையாய்த் ※
தோற்றும் ※ பசுப்பைத் தொடர்வுறுமே - யாற்ற ※
வதுவேபோ னெஞ்சே யலைந்தலைப்பட் டோடு ※
மிதுவே யுனக்கிதனாற் பேறு (அ)

இருந்தவிடத் தேதும்வரக் கண்டிருப்ப தன்றோ ※
பெருந்தகைமைக் காபரணம் பேதாய் - மருந்தெனவே ※
யாங்கினியார் தங்கடையிற் சென்றிடினு மாதரியார் ※
பாங்கிதுகாண் பாழ்நெஞ்சே பார் (கூ)

உணர்ந்தார்க் குடம்பு மிகையென் றுலக ※
முணர்ந்தா ருணர்ந்தே யுரைத்தா - ரிணைந்தாம் ※
பொருண்முழுதும் விட்டாலும் பொய்யுடம்பிற் காதன் ※
மருள துவா நெஞ்சே மறித்து (ய)

இல்லாத தில்லை யுளதுதவி ராதென்று ※
நல்லார் துணிபொருளை நாடுங்கா - லெல்லா ※
மமைந்தபடி யேவருமா லாங்கசைவெ னெஞ்சே ※
சமைந்தபொரு டாமறிவார் தாம் (யக)

இங்கேதன் றானுயிரை யேதமறக் கண்டவிடத் ※
தங்கே பெலாமமைய லாயிருக்க - வெங்கேனும் ※
காடு மலையுங் கடந்துடம்புக் காய்வருந்தி ※
யோடுவதெ னெஞ்சே யுரை (யஉ)

---

※ பசப்பு - பசலை.

அமைதற் குபாய மறிந்திடநீ வேண்டிற்
கமையுற்ற ஞானக் கரும்பைத் - தமையுற்ற
வாரியர்பாற் பெற்றங் கவரடிக்கே யேவலினை
யோரியல்பாற் செய்நெஞ்சே யுற்று (௧௩)

நீடுந் தலைகிற்கான் மேலாகி நின்றாலுங்
கூடும்படி யொழியக் கூடாதா - லோடி
வருந்தாம லுள்ளபடி வந்திடக்கண் டாறி
✻யிருந்தாலோ நெஞ்சே யினிது (௧௪)

நல்லோரை மேவி நலங்கிடக்க வங்குள்ள
பொல்லாங்கு கொண்டாடிப் போகாதே - யெல்லா
மருளியவா செய்தங் கலதொழிநீ நெஞ்சே
பொருளியல்வே றில்லையினிப் போற்று (௧௫)

வைதலும் வாழ்த்துதலும் வார்த்தையினிற் கற்பித்து
நையுமது நெஞ்சே நலமன்று - மெய்தும்
புரையிடத்து வாயுப் புரைக்குமொலி யென்றே
யுரையிடத்துக் கோளொழிநீ யுற்று (௧௬)

ஒன்பதுவா யாலு மலஞ்சொரிய வூத்தைகமழ்
புன்புலையாங் குற்றப் புலாலுடம்பை - யன்புடனே
யேத்துவார் வைவா ரிழிவுரைப்பா ரல்லாதா
ராத்தமா மெய்யுணர்வார்க் காங்கு (௧௭)

வாயுவன லீர்பிணிதான் மற்றும் பலபலவா
வாயசட வேதுவினா லாம்பயனுக் - கேயவொரு
செற்றநலங் கொண்டிலையேற் சேதனவே துத்தலையு
மற்றவனை நெஞ்சே மதி (௧௮)

ஆர்வமொடு செற்றத்தை யாரிடத்துங் கொள்ளாதே
சாரமுறு தெவ்விடத்துந் தான்கொண்டு - நீரவுணர்
நல்லோர்தஞ் சொல்லை நழுவாமை நீகொண்டு
நில்லா யிதுவே நெறி (௧௯)

✻ இருந்தாலன்றேவென்பது - இருந்தாலோவெனமருவிற்று.

பெற்றதுவே கொண்டமைந்து பேரிழவிற் கொல்காதே..※
குற்றநல மென்கோள் குறுகாதே - மற்றும்.................※
பயனின் மொழியாதே பார்த்துளமே நல்லோர்............※
நயமுமற வாதே நட.................. ................................(உ0)

பொய்க்கனவும் பேய்த்தேரும் போ துமுடல் போமளவுஞ்
சிக்கெனவே நாதன் றிருவடிமை - நெக்குருகிப்............※
பூண்டுவிடா தேகிடந்து போற்றியிடு நெஞ்சேநீ..........※
மீண்டுபிற வாதே விட.......................... ......................(உக)

ஆண்ட வியல்பை நினைந்து நினைந்துருகி......................※
வேண்டிமிக மெய்யன்பை மேன்மேலு - மாண்ட...........※
வடியிணையே பூண்டமைவா மாரமிர்தை நெஞ்சே........※
பொடிவறவே நீயுண் டிரு..........(உஉ) ஆ பாடல் - உஎரு.

நெஞ்சிற்கமைவுரை முற்றிற்று.





உ

கணபதிதுணை.

௩௰ - வது.

# சிவப்பிரகாசஸ்வாமிகள் திருச்சாழல்.

நாலடித்தரவு கொச்சகக்கலிப்பா.

இறையுணர்த்து மறவினிலெக் காலமுமெய் யுணர்வானேனுங்
கறையுடல் மலவெனமுன் கலங்குவதங் கென்னேடி……※
நிறையவனல் விறகிருக்க நிகழ்மதன மில்லாக்காற்…………※
சிறுகறையா னரித்துணல்போ ற்றிகழ்ந்திடுங்காண்சாழலோ. (க)

அருமறையா கமமனந்த முகங்களினா லுரைத்தாலு ……※
மரியபரம் பொருளிணையிங் கறியவொண்ணா தென்னேடி※
யருமறையா கமமறைந்தென் னரியனா யெழுந்தருளித்…※
திருவடியை யருவிலல்லாற் றெரியாகாண் சாழலோ…(உ)

மாத்திரையிலொருமொழியான்மாமுனிமீட்டுணர்த்திடுமேற்
சாத்திரநூற் பார்ப்பதனாற் றருபயனென் சாற்றேடி…..※
சாத்திரத்தாற் றற்பரத்தைத் தானிதென வறியவொண்ணா※
வார்த்தையிது கலகலென வடித்திடலாஞ் சாழலோ…..(௩)

எங்குமொழி வறநிறைந்த வெல்லையிலாப் பேரின்ப………※
மிங்கொருமா னிடனாகி யெழுந்தருள்வ தென்னேடி………※
சங்கைகெட மான்கோடுமான்பிடித்தாற்பொற்றனுடம்பாய்
நங்கணுடம் பழிப்பதற்கு நடந்ததுகாண் சாழலோ…….(௪)

ஒப்பரியா னெண்மலர்த்தா ளளித்ததுமே யுலகுயிர்மற் ….※
றெப்பொருளுங் கண்டதிலை யென்செய்தவா றியம்பேடி※
யெப்பொருளு மாய்நின்ற நிலையடியே யாதலினால்….※
மெய்ப்படவே கண்டவர்க்கு வேறிலைகாண் சாழலோ. .(௫)

---

சாழல் - ஒர் விளையாட்டு.

உடம்பதிலா னுடம்பாகி யுடம்பழிந்துத் தானுக்கத்.........⁕
திடம்படவே மொழியுமதங் கென்பெறத்தான் செப்பேடி⁕
யிடம்படவே மறுபயனங் கில்லாதபுயன்மழைபோ......... ⁕
லடங்கவழி யாப்பொருளா வருளினன்காண் சாழலோ...(௬)

இப்படிவேறற விறைவன் யாவையுந்தா னுயிருக்க...........⁕
மெய்ப்படவே சமயங்கள் பிணங்குவதென் விளம்பேடி ⁕
செப்பிடவே திமிரமுறு நயனத்தோர் மதிபலவா.......... ⁕
மப்படியே யறுசமய மலத்திடுங்காண் சாழலோ.... .....(௭)

இருந்தபடி சிவமாகி யிருந்ததவ ணெமக்களித்த. ...... .....⁕
பெருந்தவற்குக் கைமாறு தானுண்டோ பேசேடி. .........⁕
யருந்தவற்குக் கைமாறென் றிலையருண நிணைந்ததனு ...⁕
லெரிந்தவழன் மெழுகெனவென்புருகிடல்காண்சாழலோ(அ)

வானேரு மண்ணேரு மறையுமறு சமயமுமங் ..., ..........⁕
கேனேரு மலமாக்க வெமக்களித்த தென்னேடி..............⁕
யேனேரு மலமாக்க வெமக்களித்த தெம்பெருமான்........⁕
மானுய சுதந்தரமே மற்றிலைகாண் சாழலோ..............(௯)

செய்யசிவப் பிரகாசர் சிறிபோமை யாண்டருளி ...........⁕
யையமற நங்குலமுன் னுட்கொண்டான் காணேடி............⁕
யையனருட் டிறநிணையே னழிந்துவிழுந் தெழுந்தலறேன்
மெய்முழுதும் விதிர்விதிரோன் விணையேனுன் சாழலோ.(௰)

ஆ௨ பாடல் - ௨௮௰.

---

திருச்சாழல் - முற்றிற்று.

உ

கணபதி துணை.

௯௧-வது.

# பழித்துறைமாவலி.

அடி நான்காய்த் தம்மிலொத்துவந்த
இரட்டைக்குறள்வெண்செந்துறை.

விரித்தகன்னிற் றிரித்தகன்னில் விழித்தகன்னிலெல்லா ※
மிகுந்துருவி நின்றேயும் விளம்பவொண்ணா வீசன்.......... ※
றரித்துவந்த திருமேனி தன்னையெனக் களித்துத்..... .... ※
தானேதா னுக்கவந்த தன்மைவேடங் கிடிகோள்..........(௧)

உரைத்தபொருள் யாவையினும் புரைத்தலின்றி நின்றே ※
யுரையுணர்வா லுணரவொண்ணா வொளிமிகுத்தவொருவன்
வரைத்துவந்த திருமேனி மண்ணின்மயக் கறுத்து........ ※
மலர்க்கழல்கள் சூட்டவென்றே வந்தவேடங் கிடிகோள்(௨)

தோன்றிநின்ற பொருள்களெல்லாந் தொட்டுநின்றேயாவுந்
தோன்றுமை தோன்றிநின்ற தொன்றலொடு வந்து........ ※
யூன்றிநின்ற வுணர்வுதன்னை யுணர்வானி விருத்தி.......... ※
யுள்ளநிறங் கொள்ளவந்த கள்ளவேடங் கிடிகோள்......(௩)

நிகழ்ந்துநின்ற பொருள்களெல்லாஞ் செருமிநின்றேயாவுந்
தெரிவரிய பெரியபிரான் றீர்ந்துவந்த கோல................ ※
நிகழ்ந்துவந்து முகந்தரித்து நிகழ்வுகெட முழுத்தி...... .. ※
நிகழ்வானி விறங்கவர நிகழ்ந்தவேடங் கிடிகோள்.......(௪)

அடியிரண்டாய்த்தம்மிலொத்துவந்த
குறள்வெண்செந்துறை.

உருத்தவவ்வ விடந்தோறு மொப்பிலாப்பெருங் ............ ※
கண்ணே யுதய மாக்கிக்........................................... ※

கருத்தற்ற விடந்தோறுங் காண்பானு.... ................ ....*
யெனையங்கே கரந்தா னென்னே........................ .... .. .....(ரு)

கெட்டவவ்வ விடந்தோறுங் கேடில்லாப்.............................*
பெருங்கண்ணே கெழுமு வித்துப்..... .... ............................*
பட்டவென் றுயர்திரப் பழையதன்........................................*
னிலையிலே பதித்தா னென்னே.......................................(சா)

(வேறு.)

உன்னரிய தன்னமே யென்னுயிரை யொடுக்கி........... ....*
யொழியாமை யெவ்விடத்து மழியாமை காட்டித்..........*
தன்னடியே ஞமாறு பின்னையெனக் களித்த...............*
தத்துவனூர் தங்கருணை சாற்றலா மளவோ(எ) ஆ௨௨௧௨

பழித்துறைமாலை முற்றிற்று.



உ

கணபதி துணை.

௯௨-வது.

# தோழிக்குரைத்தல்.

எழுசீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்.

முத்தே வருந்தேடு மூலப் பொருடன்னை மொய்குழ லா
யேடி கேளாய், பித்தா முபாதிப் பெருந்துயர்ப் பவ்வப்
பிறவிப் பிணிக்கோர் மருந்தா, மத்தாடு மைம்புலன் றன்
வின் வழிமாறி மனவுரை மாண்ட வருளே, சித்தா யொளி
ருஞ் சிவப்பிர காசர் திருவடித் தாமரை காணே.........(௧)

சொல்லிய ஞானிக் கினிப்பிறப் பில்லாமை தாமொழி யா
யேடி கேளாய், நெல்லு முதலாம் விதைக ளெருப்பில்
வறுத்தான் முளையாதாற் போல, வல்லும் பகலு மறவே
சுடரு மறிவாம் வடவை யெரியில், வெல்ல வரும்பவ வித்
தா மவிச்சையும் வேவலான் மேன்முளை யாவே........(௨)

துப்பமெய்ஞ் ஞானிக் கிருவினை கூடாமை தோகைநல் லா
யேடி கேளாய், பொய்ய வுடற்செயல் புத்துடம் பாதலாற்
போந்த வவிச்சையற் றுத்தான், பொய்யாய வூனி லறிவுக்
கு முன்புள்ள விச்சையோ டேவெந் தறுமான், மெய்ய வறி
வால்விளங்கலான்மேல்வினைமேவா துவெந்தறுந்தானே.(௩)

கோதற்ற ஞானி யிருந்திடுந் தன்மையைக் கொங்கைநல்
லாயேடி கேளாய், வாதற்ற மாமறை முற்றுஞ் சிரங்களா
ல் வந்தது வாழ்த்திநின் றேத்தி, யோதற் கரிய வுணர்வி
ன்ப மேயா யொருகற் பனைகளு மின்றி, யாதுக்கு மங்கங்
கதுவாகி யன்பர்க் கறிவா யிருந்திடுந் தானே............(௪)

மெய்ஞ்ஞானி கட்கு விரதங்கள் கூடாமை மெல்லிய லாயேடி
கேளா, யஞ்ஞான மாயையைச் சுட்டுக்கொ டவ்வ தறிவுறி
யாது நித்த, விஞ்ஞான மாயையி னுவதன் காரியத் தாகும்
விரத மயருன், மெய்ஞ்ஞான மாகி விளங்கலான் மேல்வினை
மேவலொன் ருனுமே வாதே.........................................(ரு)

உரைமன மாண்டுள்ள வொண்கழ லான்றன்னை யொப்
பிலா தாயேடி கேளாய், புரைநன வோடு கனவு சுழுத்தி
புகலுந் துரியமுன் னுக, வரைமுழு துங்கழன் றேபரத்
தோடுயிர் வையமுங் கண்ணில் விழுங்கிக், கரையிறந் தின்
பக் கடலா யிருந்திடுங் கன்னேகன் ஞயிடல் காணே (சு)

ஆ.பாடல் - உகஅ.

---

தோழிக்குரைத்தல் - முற்றிற்று.

உ

கணபதிதுணை.

௩௩-வது.

# அறுதியுரைத்தல்.

அடியிரண்டாய்த்தம்மிலொத்துவந்த
குறள்வெண்செந்துறை.

ஒந்த வுடலம் விடுவதன் முன்விளைந் திப்பவந் தீரா விடில், வந்துவந் துபல னுகிப் பிறந்தெய்த்து மாண்டே விடுவர் கிடீர். ........................................................................(க)

சாதல் பிறத்த லெனுங்கேடு தானறத் தம்மை யுணரா விடிற், போதல் வருதலாற் பொன்னுச லாட்டோரு காலத்தும் போகா கிடீர். ...............................................................(உ)

உம்மை யுணர்ந்து பவச்சுடு காட்டையொப் போடே கழலா விடி, லிம்மை மறுமையி லேபிடித் தும்மை யெல்லாம் படுத்துங் கிடீர்.......................................................................(௩)

ஊனவு வடிவென்றல் விட்டுத்தன் னுண்மையை யுள்ளவா காணு விடின், மானு மழுவுமாய் வந்தாலும் வன்பவ மாவா திருக்குங் கிடீர்.....................................................................(௪)

ஒப்*பிறப் பில்லே தமையுணர்ந் தெல்லாப் பிறப்பு மொழியா விடிற், றப்பி யுடல்கொண்டு கொண்டு சதங்கையுங் காலுமாய் நிற்பர் கிடீர் ...............................................................(௫)

ஆறி யறிவே வடிவென் றிருந்தல்ல லெல்லாங் கழியா விடிற், குறைகொண் டேமாயை யும்மையூ னுக்கித்தோற் பாவைக்கூத் தாட்டுங் கிடீர்... .......................................................(௬)

---

* பிறப்பிலேயென்பது - பிறப்பில்லேயென விரித்தல்விகாரமாயிற்று.

---

கெடவென்பது - பழிப்பிடைச்சொல் - தேசிகம்,

மேலா லறிவோ மெனுதே விரைந்தும்மை மெய்கண்டு கொள்ளாவிடிற், கோலா கலஞ்செய்து வந்தும்மை யா சா பசாசங் குமைக்குங்கிடீர்........................ ..............(எ)

பந்தசங் கற்பனை யிற்றலை வைத்துப் படாதெலாழ் பட்டிடாதே, யெந்தை கழல்சூடி லெங்கெழி லென்ஞாய றென்றிருக் கல்லாங்கிடீர்...... ........................................ (அ)

நாடிக்குரவன்கழறலைவைத்துண ராதாரைநானென்றிடிற், கூடிப் பெருஞ்சுற்ற ✻ மத்தின் றலையிலே கொள்ளியை வைக்குங்கிடீர்........ ................ ........................................ ..(கூ)

மெய்யே யுரைத்த வறுதிசொற் கொள்ளார் விலங்குவேதாஉலமொப்பா, ரையோ பவங்கடந் தேறலோர் காலத்து மாவண்மையே யில்லையில்லை .................(ய) ஆஉபாடல்-கூஅ

அறுதியுரைத்தல் முற்றிற்று.

✻ அதின்றலையென்பது – அத்தின்றலையெனவிரித்தல் விகாரமாயிற்று.



நூசு-வது.

# அருமையுரைத்தல்.

அடியிரண்டாய்த்தம்மிலொத்துவந்த
குறள்வெண்செந்துறை.

நான்மறை யோதிப் பொருளுரைத்து நாடறி யக்கல்வி சாற்றினுலுந்.தானது வாகை யரிதுகாணுஞ் சலிப்பற நிற்கை யரிதுகாணும்.........(க)

இணங்காமை யெல்லா மறத்துறந்தே யிருட்டற வேதாந்த மோதினுலும், பிணங்கா திருக்கை யரிதுகாணும் பேரின்ப மாகையரிது காணும்.... ..........(உ)

எல்லையிலாகமமேறவோதி யேதுக்களெல்லாமியம்பினுலு; மல்லலறுக்கையரிதுகாணுமறிவாயிருக்கையரிதுகாணும்(௩)

(சைனசந்நியாஸம்)

பற்றற விட்டுத் தவப திந்துப் பாணியைப் பண்ணிப் பயின்றக்காலு,முற்ற நிலைநிற்கை யரிதுகாணு முடிய நிலைநிற்கை யரிதுகாணும்.... ........ ........(௪)

அறுசமயப்பொருளுங்கற்றேயங்குள்ள தர்க்கங்கள்சாற்றினுலு மாறியிருக்கையரிதுகாணுமதுவிதுவாகையரிதுகாணும்.(௫)

வேறுபிறிதிலாமெய்மைதன்னை வித்தாரமாகவிளம்பினுலு, மாறியிருக்கையரிதுகாணுமவிரோதமாகையரிதுகாணும்(௬)

தேறி யுலக மனைத்தினையுஞ் சிற்பர மாகநாஞ் செப்பினுலு, மாறி யிருக்கை யரிதுகாணு மவிரோத மாகையரிதுகாணும்.

ஆ-பாடல் - ௩௭௰௫

அருமையுரைத்தல் முற்றிற்று.



உ

கணபதிதுணை.

## ௩௫-வது.

# வளவியுடன்படுத்தல்.

அடியிரண்டாய்த் தம்மிலொத்துவந்த
குறள்வெண்செந்துறை

இமைத்து விழிப்பதற் கில்லைவானு ளிநினுள்ள துன்பங் களெண்ணில்கோடி, யமைத்துணைப் பார்த்தல் லலறு நெஞ்சே யாண்டவ னென்றென் றரற்ற*வாரீர். ..........(க)

மின்னினு நொய்திவ் வுடம்பின்றன்மை மேன்மேலும் வந்திடும் வேதனைக, ளன்னதே யிவ்வுடம் பாவ தானு லா யிவானை யெப்போது மாயவாரீர்..............................(உ)

இல்லாது வேண்டினும் வந்திசையா வுள்ளது தள்ளினு மூ ட்டுமானு, லெல்லாம் வரக்கண்டோ ரிச்சையின்றி யிருந்த படியே யிருக்கவாரீர்... ......................................(௩)

என்னுவனை கேளிஃ தொன்றுநெஞ்சே யேதேனுஞ் செ ய்தினி யுள்ளகாலந், தன்னுக நாயோமை யாண்டுகொண்ட தாள்களை யோவாது சாற்றவாரீர்.... ......................(௪)

பொன்று முடம்பு பொருந்துமின்பம் புன்னுவை நீரா கும் புன்மைநெஞ்சே, யென்றபி னெல்லாம் விழவிட்டே யிருந்த படியே யிருக்கவாரீர்..... ..............................(௫)

ஒன்றெனி லாயிர கோடிதுன்ப மோய்வின்றி யேவரு மோ ரினெஞ்சே, யொன்றுமற் றுள்ளநா மாயிருந்தே யுள நான்கழிக்க வொருப்படீரோ.......... (௬) ஆ. பாடல் - ௩உக.

வளவியுடன்படுத்தல் - முற்றிற்று.

---

* வாரீரென்பது - நெஞ்சையுயர்த்திக்கூறல்.

உ

கணபதி துணை.

௩௯ - வது.

# மனோரதம்.

அடியிரண்டாய்த்தம்மிலொத்துவந்த
குறள்வெண்செந்துறை.

முகுந்தனு நானு முகனுந்தேட மூல மொருகுரு மூர்த்தி யாகிப், புகுந்தடி யார்தொழ வீற்றிருக்கும் பூங்கோயிலா கநான் பெற்றிலேனே...... ....... ........... ..................... (க)

மறைகளு மென்று மறிவரிய மலரடி கண்டுநான் வாழும் வண்ண, மிறைவனார் தன்திருக் கோயிறன்னி லேதேனு மொன்ருகப் பெற்றிலேனே.............................. ....... (உ)

பாசங்கள் வேரைப் பறிக்கும்வண்ணம் பலிக்கென்று பேரிட்டுப் பையப்பையத், தேசிக ளுர்தா மெழுந்தருளுந் திருவீதி யாகநான் பெற்றிலேனே............... ............ (௩)

உள்ளூறு நோய்களை மொன்றின்மாற்று மொப்பிலா னந்தனை யுள்ளுதோறு, மள்ளூறு சிந்தையார் கண்சொரியு மானந்தக் கண்ணீர்நா னாக்கிலேனே......... ............. ... (௪)

பாமாலை கொண்டு தனையருளப் பாவியேன் கண்காணப் பாரில்வந்த, சிமான் புகழ்கேட்க வாகமெங்குஞ் செவியாய்த் திகழ்ந்திடப் பெற்றிலேனே........................ .... (௫)

அச்சந் தவிர்த்தென்னை யாண்டுகொண்ட வருவாளி னைதோறு மன்புகூர, வுச்சி தொடங்கி யடியளவு முளமாயிருக்கநான் பெற்றிலேனே................................ (௬)

கருவேலை யுள்விழுந் தாழுமென்னைக் கண்டஞ்ச லென்று வந் தாண்டுகொண்ட, வருண்மேனி கான வனந்தகோடி யாகத்திற் கண்ணாகப் பெற்றிலேனே..........................(௭)

அவமே பிறந்திறந் தாழுமென்னை யாழாம லஞ்சலென் றாண்டுகொண்ட, தவராச னைப்பா டிடமயிர்க்கா ரானெல் லாம் வாயாகப் பெற்றிலேனே............................(அ)

போதந்திரண்டருண்மேனியாகிப்புலையேனையாளப்புவியில்வந்த, பாதமணமுண்டுவாழநாசி பதினாயிரங்கோடிபெற்றிலே னே(௯)

கழலிணையாவருங்காணவந்தகாரணனார்தாமெழுந்தருளும் பழவடி யார்திரு வாசலூறும் படியாய்க்கிடக்கநான் பெற்றிலேனே....(௰) ஆ-பாடல்-௯௯௧.(மநோரதமுற்றிற்று)

---

## ௯௭-வது,

## ஸ்வரூபானந்தஸ்வாமிகள்

### ஏவலுக்கிசையாக்கரணத்திகழ்ச்சி.

---

(அடிநான்காய்த்தம்மிலொத்தவந்த இரட்டைக்குறள்வெண்செந்துறை)

ஓவாதே பிறந்திறந் துழிதரு மென்னை.......................*
யோகோவென் றருள்செய்யு மொளியாருஞ் சுரூபன்......*
றேவாநற் றிருமேனி நினையாத கண்க.......................*
ளவையெல்லாங் கண்ணல்ல செந்நீர்பாய் புண்ணே......(௧)

தடையில்லைத் திருவாசல் சகலமுஞ் சுரக்குந்...................*
தன்னையே தரவல்ல தலைவள்ளல் சுருப........................*
னொடிவறக் கொடிகட்டி யிருக்கவு முயிர்க........................*
ளோடிவந் தடையாத வுணர்வின்மை யென்னே........(௨)

கல்லாத முழுதையுங் கற்பித்தோர் மொழியாற்.............*
கடையோமைப் பொருளாகக் கடைக்கண்வைத் தளித்த ..*
வல்லாளன் சுருபன்சீர் நினையாத மனந்தான்............ *
வன்பாறை யிரும்பன்று வலிதிது வலிதே.....(௩) ஆ-௯௯௪.

ஏவலுக்கிசையாக்கரணத்திகழ்ச்சி முற்றிற்று.



உ

கணபதிதுணை.

௩௮ - வது,

# சிவப்பிரகாசஸ்வாமிகள்

## எவலிசைத்தல்.

அடியிரண்டாய்த்தம்மிலொத்துவந்த
குறள்வெண்செந்துறை.

சேராய் செவியேநஞ் சிற்மைகண் டும்புகுந் தாண்டவன் ※
மாறாத சீர்த்தியே மன்னு மொலியெங்கு மாகவே......(க)

உடலேநீ மேவும் பரிசெலா நம்மை யுடையவன்......... ..※
திடமாந் திருமேனி யானநின் மைகண்டுந் தேராய்நீ.(உ)

வாராய் நயனமே வாராதே வந்தெம்மை யாண்டாணைப்※
பாராய் முழுது மவனுகி நின்ற பரிசினை.. ..................(௩)

நாவேநீ யுன்னுஞ் சுவையெல்லா நம்மை யுடையவன்...※
றேவா ரடியாய நின்மைகண் டுண்ணவுந் தேராய்நீ... (௪)

☞வாச முழுதுமவ் வாசாம கோசர மானவ..............※
னேச மிகிகோல மானநன் மைகண்டு நாசியே.............(௫)

வாராய்பிர வீர்த்தியே வாராதே வந்தெம்மையாண்டவன்※
சீரார் திருப்பணி யாகவே செய்யாய் செயலெல்லாம்..(௬)

ஓராய் நிவிர்த்தியே யொன்று மொழியா விறைவனைச்..※
சேரா தவருடன் சிந்தை கனவிலுஞ் சேராதே..... ......(எ)

மனமேநீ சங்கற்ப மாக நினையும் பொருளெல்லாங்......※
கனமாம் பரஞ்சுடர் கற்பனை யாகக் கருதாய்நீ........ .(அ)

---

☞ இச்செய்யுளிற்பாடத்தைநோக்குக.

சித்தமே நீசிந் தனையாய் நினையும் பொருளெல்லாம்..✻
வைத்த மலரடி யல்லதின் மைகண்டு வாழாய்நீ ..........(௬)

ஐய மறவிட் டறுகி யிடுமிப் பொருளெல்லாஞ் ..........✻
செய்யசிவப்பிரகா சனென்றேதெளிவாய்மநீநீ. (௭) ஆ௱௪௪.

ஏவலிசைத்தல் முற்றிற்று.

---

கணபதிதுணை.

—✻—

## ௩௧-வது, நற்குறி.

---

அடியிரண்டாய்த்தம்மிலொத்துவந்த
குறள்வெண்செந்துறை.

பாரும் பரனு ரருளவருங்குறி பாதாதி கேசமுங் கம்பித்✻
தோர்வுமிழந்துவுரோமமுகிழ்த்து வுள்ளமுந்நிமெழுகாய்வி
டுமே (௧)
கலையும் வளையுடன் கற்பு மிழந்தறிமா லுங் களையறுமே✻
யலையுங்கடலேழுனுவெனுமன்பர்பாவையன்வருங்குறியே (௨)

என்பு முருகி யெதிரிலின் பவ்வெள்ளமெங்கும்பரந்நிடுமே✻
தன்பெருந்தன்மை தன்னுமறிவொன்றுச்சம்புவருங்குறி
யே (௩)
ஊனுமுயிருமுணர்வுமுணர்விடையாதுமுருகியொன்றாய்த்✻
தேனுமமிர்துமாய்நின் றுதித்தித்திடுஞ்செய்யோன்வருங்குறி
யே (௪)
சதுரைமறந்தறிமால்கொண்டுதன்னையுந்தானிழந்தோவியம்
போ, லெதிர்வுங்கழிவுமற்றின்பமீதூருமாலெந்தைவருங்குறி
யே (௫)
விச்சைபவிச்சைவிவேகாவிவேகங்கள்விடுபற்றுங்கரவித்...✻
றுச்சதுணர்தலிலாமையைபோற்றேன்றுதூயோன்வருங்குறி
யே(௬)
உரையுந்தழுத்துளமும்முருகிக்கண்ணு மொப்பிலாதுகியோ
டும், புரையுமறநிணைந்தின்பமீதூரும்புரணன்வருங்குறியே.
நற்குறிமுற்றிற்று (௭) ஆ௱௫௧.

கணபதிதுணை.

# சய-வது, பல்லி.

அடி-நான்காய்த்தம்மிலொத்துவந்த
இரட்டைக்குறள்வெண்செந்துறை.

அருவுரு வலானுருவ மாகிவரு மாகி..............................✻
லாதிமறை தேடரிய வண்ணல்வரு மாகிற்.............. .....✻
சுருபனெனு யுடையநல தோழன்வரு மாகிற்...............✻
றுரைக்கமற நல்லதிசை சொல்லுசிறு பல்லி................(க)

ஓடுமன நம்மினுட னுறவுசெயு மாகி............................✻
துள்ளறிவை மெள்ளவுணர் வாகிவரு மாகி...... ........ .......✻
னுடுமிட மெங்குமறி வாகிவிடு மாகி.......... ........................✻
னல்லகுர னல்லதிசை சொல்லுசிறு பல்லி..................(௨)

செப்பமுடி யாதபொருள் செப்பவரு மாகிற்...................✻
சிலுப்பற விருத்தவல நீரன்வரு மாகி.......... ....................✻
லிப்பவ மறுத்தகழ லிங்கன்வரு மாகி........... ..................✻
வின்னமொரு கால்வரவு சொல்லுசிறு பல்லி.............(௩)

ஆறவடி வைக்கவல வாதிவரு மாகி..................................✻
லருஞ்சிவ மெனக்கெளிய வையன்வரு மாகில்..... ..........✻
வேறுமொழி யாவிரகன் வீதிவரு மாகின்........................ ✻
மீளவொரு கால்வரவு சொல்லுசிறு பல்லி...................(௪)

இரவுபக லொழியவரு மிரவிவரு மாகி... ...........................✻
லின்பவடி வானசிவ மிங்கன்வரு மாகில் ..... .......................✻
விரவியெவ யாளவல வீரன்வரு மாகின்.... ... ............. ✻
மீளவொரு கால்வரவு சொல்லுசிறு பல்லி.............. (௫)

என்னுளமிர் தாறிநிறை யின்பம்வரு மாகி.........................✻
லென்றுமொழி யாதபர மீசன்வரு மாகின்......... ..........✻

மன்றுமுணர் வாகிய மணாளன்வரு மாசில் ........................ ⁕
வாழவொரு கால்வரவு சொல்லுசிறு பல்லி. .... ....... (௬)

உம்பர்க டமக்கரிய வும்பன்வரு மாகி ............................ ⁕
லுமையுணர் விறந்தவுணர் வுருவன்வரு மாகி.... ............ ⁕
லெம்பர மறந்திகழு மின்பம்வரு மாகி.......................... ⁕
வின்னமொரு கால்வரவு சொல்லுசிறு பல்லி(எ)ஆ௨௩௰அ

பல்லிமுற்றிற்று.



உ
கணபதிதுணை.

## ௪௧-வது, கொடி.

அடியிரண்டாய்த்தம்மிலொத்துவந்த
குறள்வெண்செந்துறை.

கருவார் புழுச்சிறைக்கே கடையேன் புகாதவண்ணங்...... ⁕
குருவாகி வந்தான்வரிற் கொடியே யுவகைகூறே ......... (௧)

மாறும் பிறவிமயன் மாத் திரையொன்றிற்றிரக்..... ...... ⁕
கூறும் விரகன்வரிற் கொடியே யுவகைகூறே....... ..... (௨)

தோலான் மறைத்தமலச் சுமையிணைநா னென்கின்ற..... ⁕
கோலாகலந் தீர்த்தான்வரிற் கொடியே யுவகைகூறே.. (௩)

தொண்டில்லையல்லர்நாயேன் றெழும்புகந்தாண்டுகொண்ட
கொண்ட லெழுந்தருளிற் கொடியே யுவகைகூறே. ..... (௪)

நற்றேவர் நின்றுண்ங்க நாயேனை யாண்டகோலங் ....... ⁕
குற்றேவல் கொள்ளுவரிற் கொடியே யுவகைகூறே ..... (௫)

நாமாநித மானதன்னை நாயேற்கு நல்கவந்த.........……※
கோமா னெழுந்தருளிற் கொடியே யுவகைகூறே……(௬)

உமையுணர் வற்றதோன்றை யுள்வங்கை நெல்லிபோலக்※
குமைகழ றந்தான்வரிற் கொடியே யுவகைகூறே…. ….(எ)

நிண்டாடத் தேவரெல்லாஞ் சிறியேனைக் கண்டுகொண்டு※
கொண்டாள வந்தான்வரிற் கொடியே யுவகைகூறே…(அ)

ஞாலமும் விண்ணுநிற்க நாயேனை யாண்டுகொள்ளக்…. ※
கோலமாய் வந்தான்வரிற் கொடியே யுவகைகூறே …..(௯)

நேடியானு மயனுநிற்க நேயமிலா நீசனெனைக்…………※
குடியாக வாண்டான்வரிற் கொடியே யுவகைகூறே……(௰)

(வேறு)

கோயிலக்குஞ்சுதம்பிள்ளைபோலுங் குறித்தேவளர்க்குங்குல க்கொடியே,யேகநற்சோதியையென்னையாளுமெம்பிரானை யிங்கெழுந்தருளென்னே(௰௧) ஆ௲௬௧ (கொடிமுற்றிற்று)

---

## ௪௨ - வது, கோழி.

---

அடியிரண்டாய்த்தம்மிலொத்துவந்த
குறள்வெண்செந்துறை.

சாவாது மூவாது தன்னைத்தந்த தம்பிரா னிங்கே யெழு ந்தருள. நாவார நாதன் றிசையைநோக்கி யழைத்திடாய் கோழிக் குலக்கொடியே………………………… ……(௧)

கண்டாருயிருண்டுதம்மைநல்குங்கருணையனிங்கெழுந்தருள, வண்டவிருந்த திசையைநோக்கி யழைத்திடாய்கோழிக் குலக் கொடியே………… ………………………… …….(௨)

மோனமொழியான்முழுதமோநி முடித்தவெங்கோமா னெ ழுந்தருள, ஞானவிறைநன் றிசையைநோக்கி யழைத்திடாய் கோழிக்குலக்கொடியே….(௩) ஆ௲௭௨. கோழி முற்றிற்று.





## சங - வது. கூடல்.

கலிவிருத்தம்.

மாலும் பிரமனு மற்றுள்ள தேவரு……………………
ஞாலமு நிற்பா ரருபந்தான் சாற்றி……………………
யால மெணக்கொண் டமிர்தந் தனைத்தந்த……………………
கோலம் வருமாகிற் கூடுவாய் கூடலே………(க) ஆ-கஎங.

கூடல் முற்றிற்று.

## சச - வது.

# சிவப்பிரகாசஸ்வாமிகள்

## கிளிப்பயிற்று.

எண்சீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்.

மூலந் தனக்கில்லா மூலீ மென்னீர்……………………
முழுதுமாய்த் தானே முளைத்தா னென்னீர்……………………
காலங்கள் மூன்றுங் கடந்தா னென்னீர்……………………
கண்ணுக்குங் கண்ணாய்க் கழன்று னென்னீர்……………………
கோலங் குருவுருவாய் வந்தா னென்னீர்……………………
குடிமுழுது மாட்கொண்ட கொண்ட லென்னீர்……………………
சீலம் பரவரிய செல்வ மென்னீர்……………………
சிவப்பிரகா சக்கனியே யென்னீ ரென்னீர்……………………(க)

பந்தமாய் வீடாய்ப் பரந்தா னென்னீர்……………………
பாவிப்பார் பாவனைக ளானு னென்னீர்……………………
சந்த மிதுவென்ன வொண்ணு தென்னீர்……………………
தன்னை யருள்குருவாய் வந்தா னென்னீ……………………
ரந்தமிலா வன்பிறவி தீர்த்தா னென்னீ……………………
ரருட்கழல்க ணந்தலையில் வைத்தா னென்னீர்……………………

சிந்தைதன்னிற் றித்திக்குந் தேனே யென்னீர்..... ..........*
சிவப்பிரகா சக்கனியே யென்னி ரென்னீர்................(௨)

சாற்றுஞ் சடங்கறுத்த தாளா னென்னீர்................. .....*
தத்துவ னேயென்னீர் தலைவா வென்னீர்.......................*
போற்றுவார் தம்மைவிடாப் பொன்னே யென்னீர்........*
புலையறவே தானிணைந்தாற் போகா னென்னீர்............*
காற்றுங் கறங்கு மெனச்ச விக்குங்... .... ..........................*
கருத்தைக் கலக்க மறுத்தா னென்னீர்................. .........*
சிற்றமி னெஞ்சகத்துச் சேர்வே யென்னீர்........... ..........*
சிவப்பிரகா சக்கனியே யென்னி ரென்னீர் ........ ........(௩)

உவ்வாத* பூமாரா யோங்கு கின்ற........... ...................*
வுள்ளொளியே யென்னி ருடையா யென்னீர்........ ........*
கவ்வாதெல் லாங்கலந்து கண்டு நின்ற............. ..... ......*
கண்ணே கருமணியே பாவா யென்னீர் . . .................. .....*
பலவாகி நின்றே பகிர்ப்பொன் றில்லாப்.......................*
பரமனே யென்னீர் பழையா யென்னீர்.......................*
சிவபோது மென்னெஞ்சிற் சேர்ந்தா னென்னீர்..........*
சிவப்பிரகா சக்கனியே யென்னி ரென்னீர்........ ........(௪)

கற்பனைக ளெல்லாங் கழித்தா னென்னீர் . ..................*
கருவாகி நின்றெவிருங் கண்ணே யென்னீர் :.....................*
நிற்பனவுஞ் செல்வனவு மானா னென்னீர்..... ..................*
நினைவறவே தானிணைந்தா விற்பா னென்னீர்............ ...*
சொற்பலவா நூல்பலவுஞ் சொன்னா னென்னீர்.. .........*
துரிசறுத்தாட் கொள்ளவல்ல சோதி யென்னீர்...............*
சிற்பரமாய் நின்றெவிருந் தெளிவே யென்னீர்............ *
சிவப்பிரகா சக்கனியே யென்னி ரென்னீர்.... ............ (௫)

கூறா பலசமயங் கோத்தா னென்னீர்........... .... ..............*
கூறற்று ருள்வத்துக் கோற்றே னென்னி . ..... ....... ....*
ராருறு மையைந்து நாலேழ் தொண்ணூற் ...................*
ஒரு மலைவகுத்தங் காகா னென்னீர்.......... ... ..............*

* பூமார் - மகத்துவமுடையவர்.

மாறாத வல்வினைநோய் மாற்று னென்னீர்.....................❊
மாசறுத்தாட் கொண்டருள வந்தா னென்னீர்..............❊
தேறாதா ருள்ளத்துச் சேரா னென்னீர்............... . .....❊
சிவப்பிரகா சக்கனியே யென்னி ரொன்னீர்..................(௬)

இந்திரசா லம்போல வெல்லாந் தன்னு..........................❊
விதமிதமா கக்காட்ட வல்லா னென்னி ............ .............❊
ரந்தரமொன் றின்றியெல்லாங் காண்பா னென்னி.. .......❊
ரண்டர்க் கறிவரிய வத்த னென்னீர்..... ......................❊
தொந்த விருண்மாய்த்த சுடரே யென்னீர் ....... ............❊
துணையடியென் சென்னிமிசை வைத்தா னென்னீர் .......❊
சிந்தையுள் ளேமன்னிச் செறிந்தா னென்னீர் ...............❊
சிவப்பிரகா சக்கனியே யென்னி ரொன்னீர் ..................(எ)

அன்னையிலு மென்றனக்கு நல்லா னென்னி......... .........❊
ரமிர்தத்து வான்சுவையே பயனே யென்னி.... ...... .......❊
ரொன்ன யெனக் கென்னுலே யென்விற்றந்த..... ..........❊
வின்னமிர் தேயென்னி ரிறைவா வென்னீர்.......................❊
பன்னுமறைக் கெட்டாத பாதா வென்னீர்.......................❊
பழவடியார் பண்டாரப் பொருளே யென்னீர்.................❊
சென்னிமிசைக் கழல்சூட்டி யாண்டா னென்னீர் ...........❊
சிவப்பிரகா சக்கனியே யென்னி ரொன்னீர்..................(அ)

பொல்லாவென் போல்வாளைத் தேடி யாளப் .... ..........❊
பூமியினின் மானிடனுப் போந்தா னென்னீர்.......... .....❊
நல்லார்க ளெல்லாரு நிற்க நாய்க்கு............ ..............❊
நற்றவிசிட் டெனையாண்ட நாதா வென்னீர்....................❊
கல்லாமை கற்பித்த காளா யென்னீர்............ ...............❊
கருணைத்த டங்கடலே யென்னி ரொன்னீர்........................❊
செல்லாத மீளாத செல்வ மென்னீர்.... ........... ..........❊
சிவப்பிரகா சக்கனியே யென்னி ரொன்னீர்........... .....(௯)

ஒப்பொருவ ரில்லா வொருவ னென்னி...................... ..❊
ருத்தமர்க் கேகன்று யுதித்தா னென்னி..........................❊

றெப்பொருளுந் தானு யிசைந்தா னென்னி.............. .....✻
ரிடையறு வானந்த வெள்ள மென்னீர்..........................✻
தப்பறவே யென்னைவலித் தாண்டு கொண்டு.... ...... .....✻
தாளிணையென் சென்னிமிசை வைத்தா னென்னீர்..........✻
செப்பரிய சுவானுபவத் தேற வென்னீர்........ ................✻
சிவப்பிரகா சக்கனியே யென்னி றென்னீர்.....................(௰)

அள்ளூறு முள்ளத் தடியார் மெய்யி............. ................✻
லனுகிநோ யிணையறுத்திட் டினிமே லொன்று.............✻
நள்ளாமை காத்துவந்த நம்பா வென்னீர்........... .........✻
நானேநீ யாய்நயந்த நாதா வென்னீர்..........................✻
வின்ளாமை யோர்களமு மடியார் கூட்டம் ........ ...........✻
விரவியினிக் குறைக்காலம் போக்க நாயேற்.......... .......✻
குள்ளானே யருவியினி யுடலம் வீபோ..................... ...✻
துணர்ந்திருந்தே யொழிவிப்பா யென்னி றென்னீர்.....(௰௧)

ஆ_பாடல் - ௬௮௪.
கிளிப்பயிற்று - முற்றிற்று.

## ௪௫-வது,

## குறையுரைத்தல்.

அடியிரண்டாய்த்தம்மிலொத்துவந்த
குறள் வெண்செந்துறை.

கொண்டாள் குரவனே கூர்மய றீரானேற்......... ........ .....✻
கண்டா ருயிருண்ணுங் கண்டக னென்பேனே............ (௧)

என்பணி கொண்டென்று மின்புரு னேன்மாயை...... .....✻
வன்ப ருயிருண்ணு மறவன்கானென்பேனே(௨) ஆ_௬௮௬.
குறையுரைத்தல்முற்றிற்று





உ

கணபதி துணை.

## ௩௬-வது, வரவுசாற்றல்.

அடி நான்காய்த் தம்மிலொத்துவந்த
இரட்டைக்குறள்வெண்செந்துறை.

தோரணங்கணாட்டு * மேடோ சோலையெங்குஞ்செய்யுமேடோ
தூணுறைகள்பொதிந்தெங்குந் துய்யவிளக்கேற்றுமேடோ *
வாரணமு மயன்முதலா மமரருமங் கயர்வுறவே .... ......*
யாதனெனையாண்டுகொள்ளவாரியன்காண் வருகின்றான். (௧)

வீதியெங்கும் வெள்ளைமணல் பரப்பிநீரை விடுமேடோ. *
வெற்றிக் கொடியுடனே விதானமேற் கட்டுமேடோ ..... *
வாதிவேத நாலுமுர சாகவறைந் தாடுமேடோ .............. *
வன்பருள்ளங்கோயில்கொள்ளவெங்களுதர்வருகின்றார். (௨)

சோகமோ காதியெல்லாந் துணித்துநீர் விடுமேடோ .... *
தொந்தமுற்ற பந்தமுற்றுந் துவக்கறுத் தீருமேடோ .... *
வாகமாக வருளாலே யவையவங்க ளதுசாத்தி .............. *
யாறவடி வைக்கவெங்க ளன்னலார்காண் வருகின்றார்.. (௩)

வீணைவங்கி யங்களாலே வேதகீத மோதுமேடோ .......... *
விழுந்தெழுந்திங் கோலமிட்டு விரகழிந்திட் டாடுமேடோ *
பேணுமன்ப ராவியுண்டு பேராதுள்ளங் கோயில்கொள்ளப்
பெத்தமுத்தமற்றவின்பப் பெருமானார்தாம்வருகின்றார். (௪)

பூமியெங்கும் பொற்பூமாரி பொழிந்துநின் றிடுமேடோ *
பூரணப்பொற் குடங்களும் பூவிரிய மெடுமேடோ .......... *
தாமமெங்கு நாற்றுமேடோ தலையினை லாடுமேடோ ..... *
தம்மையன்பர்க் களிக்கவென்று தம்பிரானார்வருகின்றார் (௫)

ஆ. பாடல் - ௩௧௧.

---

* ஏடீகளோவென்பது ஏடோவெனப் பன்மை ஒருமையாய்வந்த வழுவமைதி.

வரவுசாற்றல் முற்றிற்றும்.

உ

கணபதி துணை.

௪௭-வது,

# சிவப்பிரகாசஸ்வாமிகள்
## ஸ்வரூபானந்தஸ்வாமிகள்
## அர்ச்சனை.

அடியிரண்டாய்த் தம்மிலொத்துவந்த
குறள்வெண்செந்துறை.

என்னைக் குறித்தா ளெழிலார் திருமேனி.......................✻
மன்னர்க் கிடும்பிட மதியிலேன் காதலே.......... ... .....(௧)

ஓது மறைக்கு மும்பர்க்கு மரியவவர்..... ......... .... .........✻
பாதம் விளக்குநீர் பண்பிலே னீர்மையே..... .............(௨)

தேசுக்குத் தேசாந் திருவான மேனிக்குப்....... ...............✻
பூசப் படுஞ்சாந்தம் புலையேன் மனத்தன்பே...... ... (௩)

பார்த்ததெல்லாந் தானாப் பழுதற்ற சோதிக்குச்... .......✻
சாத்தும் பரிவட்டந் தமியேனோத் துஞ்சொல்லே...... (௪)

தேடிமூவர் வாடச் சிறியோமை யாண்டவர்க்...................✻
✻ காடு மஞ்சன மறிவிலேன் கண்ணீரே...... ...... .......(௫)

ஏத்துமன்ப ருள்ளத் தின்பமா மீசர்க்குச்.........................✻
சாத்துங் கலபமுஞ் சதுரிலே னசையே.........................(௬)

இணையேது மில்லாத வெழிலார் திருமேனிக்.... ....... ... ✻
கணியா பரணமு மறிவிலே னார்வமே .......................(௭)

---

✻ ஆட்டுமென்பது - ஆடுமெனப்பிறவினை - தன்வினையாய்வந்தது.

தணையன்றி யொன்றிலாத் தம்பிரான் றிண்டோண்மேற்,
புணையுந் திருமாலை புலையேன்சொன் மாலையே........(அ)

பாங்காக வந்தெம்மை யாட்கொண்ட பண்பர்க்குப்.........☼
பூங்கோயி லாவதென் புழுவார் குரம்பையே.............(௯)

தூற்றுஞ் சுருதிக டொடர வரியவர்க்..........................☼
கேற்றுநந் தாவிளக் கெழிலாரு ஞானமே. ............(௰)

செல்லறீர்த் தென்சிந்தை மேவிய செல்வர்க்கு..............☼
நல்லதூ பந்தீப நாயேன் மனத்தன்பே.................(௰௧)

எங்காத லுள்ளேநின் றின்பஞ்செ யீசர்க்குச்...............☼
சிங்கா சனமென்றுந் தெளிவிலேன் சிந்தையே........(௰௨)

சாற்றுமறைக் கெட்டாத தம்பிரா னார்தமக்...............☼
கேற்றும் பரிகல மேழையே னுள்ளமே.................(௰௩)

நோக்கரிய மேனியது நுண்ணுணர்வா மீசர்தமக்........☼
காக்கிய போனக மறிவிலே னாவியே..................(௰௪)

ஐயமறுத் தாளு மழகார் சுரூபர்க்குச்....................☼
செய்ய வமிர்தென்றுந் தெளிவிலேன் சிவனே........(௰௫)

ஆனநி லாகாத வானந்த நாடர்க்குப்.........................☼
போனக மாவது புலையே னுயிர்தானே................(௰௬)

தெள்ளத் தெளிவாகுஞ் சிவப்பிர காசர்க்குக்...............☼
கள்ளப் பொறிபுலன் கறியமு தாகுமே................(௰௭)

போற்றுமன்பர் நெஞ்சிற் பொருவில் சுரூபருக்............☼
கேற்றுங் கறியென்ற னிடவை யாவுமே...............(௰௮)

கண்ணுக்குக் கண்ணாகுங் கருதரு மீசருக்.................☼
கெண்ணப் படுங்கறி யெல்லாமென் பாசமே...........(௰௯)

செப்பரிய மேனியெங்கள் சிவப்பிர காசர்க்கு..............☼
முப்பழ மென்குண மும்மல முற்றுமே.................(௨௰)

ஞாலமேலா மாகி நின்றிடு நாதர்க்குப்.............................※
பாலுடன் றேனுமென் பாவக முற்றுமே... .............(உ௧)

நிக்காலா நியொன்று மில்லாத செல்வருக்.......... ...........※
கக்கார மாவது மென்மதி யாகுமே..... ....................(உ௨)

அறிவு வடிவாக வருள்செய்த வீசர்க்கு.............. ...........※
நறுநெ யமிர்தென்று நாயேன் பவந்தானே. .........(உ௩)

விண்ணோர்கள் வாடமண்ணோர் விறெய்த வந்தார்க்குத்....※
தண்ணி ரமிர்தென்றுந் தாவில்லா மையையே.... .....(உ௪)

உளையற்றே யென்னை யுண்டார்க் கடைகாயும்..............※
வருமென்னுமேழ் சுற்றமும் வன்பவம் யாவுமே......(உ௫)

கிதுகற்ற சிற்பர மாகிய செல்வர்க்கு......... ....................※
நலகற்பூர மென்னை நண்ணுவோ ராவியே.............(உ௬)

வார்த்தையொன் றுலேயென் வன்பவ மாய்த்தார்க்குத்.. ※
தோத்திரந் தானென்னச் சொல்லுவ தெல்லாமே... (உ௭)

தாமே தமக்கொப்பாந் தத்துவ நாதர்ச்குப்........ ..........※
பூமாரி யாவதென் புன்றலை தாழ்வதே (உ௮)முற்றிற்று.

---

## ௪௮-வது, அநுபூதிநிலையம்.

(கலித்தாழிசை)

தல்லுந் தொம்முமாறு யென்றுநீர் போகாதீர்.. ..........※
சற்றே மதித்துக் காட்டீர்....... ........ ............ ............ .※
புல்வியுமைத் தந்நிலைப் போகலா மோதான்.......... ......※
பொன்னி வலஞ்சு ழிரே......... ... ...................... ....... .※
போதக் கயிற்றுலே கட்டிக்கொண் டுள்வைத்தேன்......... .※
போகலா மாகிற் போரீர்......... .... .... ............. .............※
போதப் பெருமானே பூரண போதரே............ .......... ※
போகலா மாகிற் போரீர்......................... ... ........... (௧)

வேதஞ் சிதைசொல் லிற்றென் றுநீர் போகாதீர்........ ※
மெய்யும்மைக் காட்டித் தந்தி.... ........................ ※
ராதிபுராணரோ யானந்த நாடரோ......... ................... ※
யங்ஙனே போக லாமோ...................... ........ ........... ※
வள்ளூறு முள்ளத் தணையிட்டு வைத்தே................. ..... ※
னங்ஙனே போக லாமோ........ .............. ....... .......... ※
வாதிபுராணரோ யானந்த நாடரோ........... ..... ... ............ ※
யங்ஙனே போக லாமோ.............(உ) ஆ-பாடல் - சஉசு.

அநுபூதிநிலைய முற்றிற்று.

---

## ௪௯-வது, உயிருணி.

---

கலிவிருத்தம்.

மறைநான்முக னரன்வானவர் மயல்கொண்டின மயரப்.. ※
பொறையாமுட லெனவாயுழல் புலையேன் பொருளாக... ※
முறியாவென முழுவின்பம தருவாகிய முதல்வ.......... ※
னறைகூவியெ னகமன்னிய வருடானதி சயமே.........(க)

பூதங்களை நானென்றுழ போதம்முண ராதே............ ※
வாதம்பல சொல்லியவ மேமாய்வுறு வேனை.............. ※
வேதங்களு மறியாமலி ரடிசூட்டிய விகிர்தன்..... ........... ※
பேதங்கெட வுள்வந்தமை பேசவறி யேனே.... ...........(உ)

கானேனவ னன்றிப்பிறி தொன்றும்முள வாக.............. ※
நானேனைய வில்லாமையி னன்றும்மது வன்றும்........... ※
பூனேனினி யொன்றும்புனி தன்றுவிளை யன்றி..... ...... ※
வினைசெய்தே னுளமன்னிய விகிர்தன்செய்த விரகே.. (௩)

எறிமாருத மெனவேகுல மனமா மயறவிர.................... ※
மறியாவுள மழியாவறி வுருவாகிய வலவன்..... ....... ..... ※
செறிவார்கழ லடியென்றலை சேர்த்தியெனை யாண்ட...... ※
தறியேனுள மழியேனரு வினையேன்செய்த வவமே...(௪)

பலவொன்றென வறியேன்பக விரவென்பது மறியே..... ※
னல்தோன்றையு மறியேனறி வானந்தம தறியே...... ※

னலனெறிய மறையிறவை நவில்கின்றிடு பிரமங்...... ※
குலவுங்குரு பரனெனைக் குறிக்கேடுசெய் தனரோ......(௫)

தத்தோம்பத மோதியொரு சற்றும்முண ராதே............※
மத்தம்முறு வார்தம்முடன் மால்கொண்டுழல் வேனை...※
யத்தன்னடி சூட்டியறி வாக்கியொளி காட்டி....................※
மெய்த்தன்மையவருள்செய்தமைவிளையெனறியேனே.(௬)

முன்னைப்முழு துங்கண்டிடு மூவாமுத லொருவன்...........※
கன்னுநரி கொண்டெல்கன வஞ்சகனை வித்துத்.........※
தன்னாரு வடியாரொடு தகுவித்தெனை யாண்டே.......※
வென்னுநயிர் முழுதுண்டதோ ரின்பமறி யேனே........(௭)

நற்றாயொடு சுற்றம்பொருண் முற்றும்முற வற்றுக்......※
கற்றாரொடு கற்பார்களை யற்றம்மற விட்டுத்..................※
தெற்றார்மனஞ் செற்றுச்சிவ னற்றாளிணை பற்றிக்..........※
கற்றுவென வுற்றுக்கசிந் துருகித்திரி வேனே..............(௮)

அன்றுமென வென்றியறி வின்றியறி கின்று..............※
யொன்றுவது மன்றுயொழி வின்றுயொழி கின்றுய்.........※
நன்றுபது மன்றும்நடு வின்றுய்முடி வின்றுய்..............※
நின்றுய்ப்பிறி தன்றுபெனை யுண்டாயுள நின்றே.........(௯)

சிரார்சிவன் வந்தென்றனி நெஞ்சஞ்சிவ மாக்கிப்............※
பாராவிழி யாலேபவ பாசம்பறி வித்து ......................※
நேராவிணை யுந்தானெடி தூண்டானுள நின்றே.............※
யோராவமிர்தானுவிதுவென்னேயிதுவென்னே(௰) அ௨ சா௬௧
உயிருணி முற்றிற்று.

---

## ௫௰-வது, அச்சோ.

---

அடியிரண்டாய்த்தம்மிலொத்துவந்த
குறள்வெண்செந்துறை

எழுகடலுங் குல்வரையு மேழுலகு மென்வஞ்சத் நிறைக்கும்
போதா, விழிகடையே னுவமன்னி யிணையிலிநீங் காதிரு
ந்தா னச்சோ வச்சோ..........................................(௧)

துடித்துமனம் புலன்வழியே நூறுசெய்து மாறுபடுந் துணையிலேனை, யடித்தடித்துப் பாலூட்டி யானந்த மெனக்களித்தா னச்சோ வச்சோ.......................(௨)

சாதலென்றும் பிறத்தலென்றுந் தடுமாறு மிருவினையின் றளையை வாங்கி, யாதலென்று நடராசன் றிருவுருவ மெனக்களித்தா னச்சோ வச்சோ.......................(௩)

நட்டா※ருந் தம்முடனு நலம்போலப் பொய்நடித்துநலமி லாதேன், பட்டா※ருங் கண்டிருந்தும் பழவடியா ருடனுண்டா னச்சோ வச்சோ.......................(௪)

குடிமைகுல மாச்சிரமங் கோத்திரசூத் திரமனைத்துங் குலைந்து போக, வடிமைகொண்ட நடராசன் றிருமேனி யெனக்களித்தா னச்சோ வச்சோ.......................(௫) ஆ௨ ௬௯௬.

---

※ உம்மையிடைச்சொல். ※ பட்டாருந்தநுமென்பதுபட்டாருமெனவிகாரமாயிற்று

அச்சோமுற்றிற்று.

௫௰௧-வது
சிவப்பிரகாசஸ்வாமிகள்

# நல்லேன்.

குறள்வெண்செந்துறை.

செய்ய மேனிக்கு நல்லேன் றுய்ய.......................※
செங்கனி வாயிற் சிரிப்புக்கு நல்லேன்.......................※
மைய றீர்த்தார்க்கு நல்லே னென்னை.......................※
வாழ்வற வாழ்வித்த வண்மைக்கு நல்லேன்.......................(௧)

ஆரா வழகுக்கு நல்லே னைய.......................※
னணிந்த மாலைக்கு மார்புக்கு நல்லேன்.......................※
சீரார் கருணைக்கு நல்லே னையன்.......................※
றிந்தித்த வார்த்தைக்கு நல்லே னல்லேன்.......................(௨)

பார்த்த பார்வைக்கு நல்லேன் செய்ய.......................※
பங்கயக் கண்ணுக்கு நல்லே னல்லேன்.......................※
வார்த்தைக் குச்சால நல்லே னென்னை.......................※
வாழ்வித்த காலுக்கு நல்லே னல்லேன்.......................(௩)

கூரு நோக்குக்கு நல்லேன் ஞானக்........................ ✻
குற்றுடை வாளுக்கு நல்லே னல்லேன்........................ ✻
வீரன் காலுக்கு நல்லேன் கட்டும்........................ ✻
வீரக் கழலுக்கு நல்லே னல்லேன்........................(௪)

மீட்ட வீரருக்கு நல்லேன் மேனி ........................ ✻
விட்டுப் பொழியுங் கருணைக்கு நல்லே........................ ✻
னூட்ட வருளுக்கு நல்லே னெங்க........................ ✻
ணாதர் சிவப்பிரகாசர்க்கு நல்லேன்..........(௫)ஆ ௪௪௧

நல்லேன்முற்றிற்று.

## ௫௨-வது, ஐயகோ.

ஊட்டினும் போகில னையகோ........................ ✻
வுதறினும் விடுகில னையகோ........................ ✻
பாடிலன் பழியில னையகோ........................ ✻
படிறுசெய் தெனைமாய்த்தா னையகோ........................(௧)

வலியப் பிடித்தாண்டா னையகோ........................ ✻
வாயைப் புதைத்தாண்டா னையகோ........................ ✻
கல்விக்க ணாடாண்டா னையகோ........................ ✻
கண்ணேகண் ணாக்கண்டா னையகோ..........(௨)ஆ ௪௪௩.

ஐயகோமுற்றிற்று.

௫௩-வது, தாய்வார்த்தை.

## இது-ஸ்வரூபானந்தஸ்வாமிகளது

அடியிரண்டாய்த்தம்மிலொத்துவந்த

குறள்வெண்செந்துறை.

வாசாம கோசரம் வந்ததென்னுள்........................ ✻
வானவ ரேமாக்க மாமலர்த்தாள்........................ ✻
கூசாதென் சென்னியில் வைத்ததென்னுள்........................ ✻
குளித்தாள்கண் ணீர்கொண்டு கோதைதானே..........(௧)

சென்னியில் வைத்த கரங்களென்று............................*
டிருக்கற நோக்கிய நோக்கமென்றாள்............................*
வன்னிமுன் வைத்த மெழுகதென்ன............................*
மாறா துருகினள் வாணுதலே............................(௨)

தீண்டுவ னேசெய்ய பாதமென்று............................*
டிருமாலுங் கண்டில னேடியென்று............................*
லாண்டவ னேயென்றாள் பின்னையொன்று............................*
மறிந்தில னேயென்று ளாயிழையே............................(௩)

வாசக மொன்றென்று விப்பிறவி............................*
மாண்டதென் றாள்செய்த வல்லபந்தான்............................*
பேச விரகில்லை காணுமென்றாள்............................*
பேசா திருந்தாளென் பேதைதானே............................(௪)

உன்ன வரிய பொருளதென்று............................*
ளோதவொண் ணாதென்று லப்பொருளைச்............................*
சொன்ன விரகென்றாள் பின்னையொன்றுஞ்............................*
சொல்ல வறிந்தில டூப்மொழியே............................(௫)

எத்திக் கடையேனை யாண்டதென்று............................*
ளெப்போது மின்னமிர் தாகிநின்று............................*
தித்திக்கு மேதிரு வார்த்தையென்றாள்............................*
செய்வ தறிந்திலள் சேயிழையே............................(௬)

கைம்மாறு காணேன் கருணைக்கென்றாள்............................*
கம்பித்தாள் காயங்கண் ணீர்சொரிந்தாள்............................*
விம்மா வழுதாள்பின் செய்தசெய்கை............................*
விளம்பு மளவோவென் மெல்லியலே............................(௭)

ஏத்துவ தேயடி யேறுமென்று............................*
வின்ன மறியா மறைகளென்றாள்............................*
சாத்துவ தேதிரு மேனியென்று............................*
டரிக்க வறிந்தில டையருனே............................(௮)

உரியேனல் லேன்மற் றொருவர்க்கென்று............................*
ளுடையா னடிப்போ தொருகணமும்............................*

பிரியே னெனச்சொன்னாள் பேச்சொழிந்தாள்...............*
பித்தியா னவனென்றன் பெய்வளையே........................(௯)

ஒருமேனி கொண்ட பரிசேயென்றா............................*
ளுள்ளத்தா லுள்ளவொன் றாதென்று...........................*
திருமேனி யெல்லாங் கருணையென்றாள்......................*
செய்ய சுரூபனென் றாதிருவே..............௰, அ௨ ௪௫௬

தாய்வார்த்தைமுற்றிற்று.

---

## ௰௪ - வது, தோழியுரைத்தல்.

---

குறள்வெண்செந்துறை.

குருபர னென்றாள் கோலமென்றாள்.............................*
கோதி லருட்குணக் குன்றமென்றாள்...........................*
பெருமறை காணாது பீடுவாடப்...................................*
பேயேற் கெளிவந்த பித்தனென்றாள்..........................(௧)

கருணை பொழிகின்ற கண்களென்றாள்........................*
கருக்கெட வைத்த கழல்களென்றாண்.........................*
மருவற வென்னைத்தா னாக்குவித்த...........................*
வல்லப மென்றாள்பின் வாக்கிறந்தாள்.......................(௨)

பூங்கோயி லென்றாள்பொற் பீடமென்றாள்,....................*
புனிதனா ரென்றாள்பொன் மேனியென்றா.......................*
ணாங்காண வந்த நலமதென்றா.................................*
ணயனநீர் மல்கி னாணிழந்தாள்...............................(௩)

மீட்ட விரகென்றாள் வேறுகாணாள்............................*
விழியால்வே நித்த விரமென்றா...............................*
ணாட்ட வரிதென்றா ணாடவொண்ணா...........................*
நல்மாஞ் சிவப்பிர காசனென்றாள்............................(௪)

செய்ய திருப்புன் முறுவலென்றா..............................*
டிருவான கோலத்தின் சீர்மையென்றாண்.....................*
மெய்ய னுரைக்கு முரையிதென்றாள்..........................*
விம்மினாண் மேன்மேலு மேவினாளே..........................(௫)

செய்ய வழகென்ருள் சென்றடையாத்.....................*
திருவென்ருள் சிமான் சுரூபனென்ருள்...... ..................*
பையப் பவம்பாழ் படவிழித்த ............... .....................*
பார்வையென் ருள்பார்ப் பற்றனளே..............................(சு)

செந்தா மரைமுகஞ் செய்யவாய்கண்...... ............... .......*
திருப்பாதங் கைகளுஞ் செய்யமேனி............................ *
யந்தா மரைபெற்ற தார்பெறுவா .... ....................................*
ரகத்தா மரையா லமிர்தமென்ருள்....... .......(எ) ஆ௨சசுய.

தோழியுரைத்தல் முற்றிற்று.

## ருரு-வது, எம்பாவை.

குறள்வெண்செந்துறை.

உண்பானு யுடுப்பானு யுழல்வானு யுடல்சாத்நிக்........ ...*
கண்கான வரிலலது கலக்கறுமோ வெம்பாவாய்........(க)

ஆண்பெணவி யணைத்துயிர்க்கு மாதார மாயிடினும்........*
காண்படியே வரினலது கலக்கறுமோ வெம்பாவாய்....(உ)

ஆ௨சசுஉ.

எம்பாவைமுற்றிற்று.

## ருசு-வது, அக்கைச்சி.

குறள்வெண்செந்துறை.

பிணஞ்சுடு தடியென்ன வென்வணக் கொண்டே.... ........*
பெரும்பற்றை யெல்லா மறச்சா டி........... ......................*
யணைந்த வென்னையு மப்படி யிறில்போ..... ...... ..........*
தத்நில் விட்டனு போகத் திருந்தானே. ................. ....(க)

ஆதி மாயையென் னக்கைச்சி யந்த....... .........................*
வான்மக னுற்ற போதே கெட்டேன் .............................*
போதந் தானுஞ் சுமையென்று விறில்.......... .......... .... *
போதத்நில் விட்டனு போகத் திருந்தானே.............. (உ)

ஓது மாயையென் னக்கைச்சி யொப்பிலா ............ *
னென்னுற வுற்ற போதே கெட்டேன்..... .... ...............*
போதந் தானுஞ் சுமையென்னு விறில் ............. ........*
போதத்தில் விட்டனு போகத் திருந்தானே..(௬) ஆ. சகரு.

அக்கைச்சிமுற்றிற்று.

---

௫௭-வது,

# சிவப்பிரகாசஸ்வாமிகள் மால்.

குறள்வெண்செந்துறை.

சால மாலானே னம்மே யென்வணத்.................. ....*
தானகப் பார்த்தசெந் தாமரை கண்ணுக்குச்............... *
சால மாலானே னம்மே...........................................*
ஞாலங் காண்கிலே னம்மே யெங்க........ .......................*
ஞயனர் தந்திரு மேனியல்லான்.......................... ...*
ஞாலங் காண்கிலே னம்மே...... ....................... ..........(க)

பேச வறிகிலே னம்மே தன்றன். . ..... ............ ...........*
பேரா வருளும் பெருந்தன்மை யுங்காட்டிப்.....................*
பேராசை யாக்கினு னம்மே... ..... ....... ................. ... *
தேசு நிகழுங்கா ணம்மே யெங்கள்.... .............................*
செய்ய சிவப்பிர காசன் திருமேனி...............................*
தேசு நிகழுங்கா ணம்மே.... .... ...................௨, ஆ. சகள.

மால்முற்றிற்று.





உ

கணபதி துணை.

ஸ்ரீ அ-வ து,

# சிவப்பிரகாசஸ்வாமிகள்

# குரவை.

அடிநான்காய்த்தம்மிலொத்துவந்த விரட்டைக்குறள்வெண்செந்துறை.

சதுமறைக் கரியதா டமியனுக் கெளிவந்த.......................※
தன்மையைப் பாடியே குரவையிடு......... ..........................※
தம்பிரா னெனையாண்ட கருணையின் பெருமையைச்....※
சகமெலா மறியவே குரவையிடு .. ... ....................... ....※
கதுவுமுற் பவந்தனைக் கணத்தினிற் கருவறக்...............※
கடைக்கண்வைத் தமைபாடிக் குரவையிடு... ................ ※
கல்வியு மழிந்தது கருத்தெல்லா மிறந்தது...... .. .........※
கண்ணேகண் ணாய்த்தென்று குரவையிடு...... ............. (௧)

ஒப்பிலா வொருமொழி யதனலே முழுதையு .............. ※
மோதிய வறம்பாடிக் குரவையிடு......... .................. .....※
வூழிநிலை யாய பவபாச மொருகணத்...................... ........※
தொழித்தவா றதுபாடிக் குரவையிடு.... ....... ..... .. ...※
செப்பிட வரியதோர் தெளிவந்தெ னுளநின்று..............※
தித்திக்குந் திறம்பாடிக் குரவையிடு ...... ...... ......... .....※
சிறியோமைப் பொருளாகத் தேடிவந் தாட்கொண்ட.....※
செய்யசே வகம்பாடிக் குரவையிடு ...........................(௨)

உலகெழும் விழுங்கிய வொளியாகு முணர்வையு..............※
முண்டவொண் கழல்பாடிக் குரவையிடு...... ....................※
வுருவாகி யருவாகி யவ்வாகி யொழியாத .......................※
வுண்மையா னிலைபாடிக் குரவையிடு...........................※
சலமாறு மதியென்னக் குணையுமென் னுளரனேதற்..........※
சிவமாக்குந் தகைபாடிக் குரவையிடு............................※
சதுரான மொழியும்புன் முறுவலுந் தமியேனைச்....... ※
சதுரழித் தமைபாடிக் குரவையிடு..... ...... ....௩, ௮௨, ௪௭௰

குரவைமுற்றிற்று.



உ

கணபதி துணை.

ஸ்ரீ ௯-வது

# ஸ்வரூபானந்தஸ்வாமிகள்.

## குணவஸ.

அடி நான்காய்த் தம்மி லொத்து வந்த
இரட்டைக்குறள்வெண்செந்துறை.

மறைசொ லும்பொருண் மனித வேடமாய்
வந்த தென்றிடு குணவஸ
மாலு மாலுறும் பதமென் சென்னியில்
வைத்த தென்றிடு குணவஸ
யறைக டற்றிரை மனமி மைப்பிலே
யழிந்த தென்றிடு குணவஸ
யறிவு ருவமா யல தகண்டிட
வரிதாய்த் தென்றிடு குணவஸ (க)

இறந்து போய்வரும் வழிதூர்ந் தபுல்
லெழுந்த தென்றிடு குணவஸ
யிவ்வு டம்போடே யிருந்து முத்திக்கே
யிருந்தோ மென்றிடு குணவஸ
மறந்து முன்னியு மிராத போதமாய்
வாழ்ந்தோ மென்றிடு குணவஸ
வள்ள லாருள் செய்த வல்லப
மறவோ மென்றிடு குணவஸ (உ)

சுருதி களொரு கோடி சொல்லியுந்
தோன்று தென்றிடு குணவஸ
சுரூபா னந்தனோர் சொல்லி லானந்தந்
தோன்று மென்றிடு குணவஸ
கருத வொண்ணாத பொருளைக் கண்ணாலே
கண்டோ மென்றிடு குணவஸ
கருணை யங்கழ றன்னைக் கண்டுகண்
களித்தோ மென்றிடு குணவஸ (௩)

சொலவி னில்வரு கவய வவவலத்.......................*
தொவலத்தோ மென்றிடு குணவைச்..... .......................*
சொலவ றுஞ்சுக சுருப வாரியிற்.......................*
சுகித்தோ மென்றிடு குணவ..... .......................*
மலவு டலினின் மதிசெ யும்மதி....................... .......................*
மறந்தோ மென்றிடு குணவ.................. .. ..........*
மதிய ழியவே வருமதியையு....................... .......*
மதித்தோ மென்றிடு குணவ.......................(௪)

நிரந்தர வின்ப வெள்ள மெங்களு............ ...... .........*
நிறைந்த தென்றிடு குணவ.......................*
நிகில மென்பது மறவியுங் கூட.......................*
நிகழா தென்றிடு குணவ ....................... .......................*
யிருந்து பாரொன்ற விரகையெப் பொழுது.......................*
மியம்பி நின்றிடு குணவ... .. ... .......................*
யிப்ப டியேநாம் வாழத் தந்தாவண..... .......................*
யேத்திநின்றிடு *குணவ (௫)ஆ௨ எடு. குணவமுற்றிற்று.

## ௬ய- வதுபகடி.

அடி நான்காய்த் தம்மிலொத்துவந்த
இரட்டைக்குறள்வெண்செந்துறை.

கழியாமை யூழியூழி யுறவாகி வருகின்ற.......................*
கருவிண நாசனென் றிடுபகடி. ........... ... .. ..........*
கண்டிருந் தெவையாரக் கழல்காட்டிக் கொடியிட்ட......*
கருவணமா மவயனென் றிடுபகடி.... .......................*
விழியாலே தவையாக வெவமாரச் சதுர்செய்த..........*
விரகிண யுடையானென் றிடுபகடி ... .......................*
விரவியே யுடலுயி ருலகங்கண் முழுதையும்.......................*
விரவாத வீரனென் றிடுபகடி...... ....................... .....(க)

சதகோடி விதமாக வெழுந்திடுஞ் சடங்கிணச்..... ... . ....*
சாடிய சதுரனென் றிடுபகடி ....................... .........*

* குணவ என்பது - வீராவேசத்தாற் கொக்கரித்தல்.

சதுமறை யொருமூவர் தலையுற வணங்கியுஞ்....................*
சாருதற் கரியானென் றிடுபகடி.......................... ...*
மதமானந் துவளாயாக வஞ்சந்தே செதுமென்வள........*
வலிந்துவந் தாண்டானென் றிடுபகடி........... ... .........*
வாசாம கோசர வடிவின மலர்க்கையின். ...................*
மணியென்ன வளித்தானென் றிடுபகடி.....................(௨)

அறிவானே டறிபொரு ளாகியே யெழுஞ்செல.... .......*
லிழுகுறத் திரித்தானென் றிடுபகடி.... .......................*
யறிபொரு ளறிவினி லறிவித்தவ் வறிவையு ................*
மறிவானி லழித்தானென் றிடுபகடி.................... .....*
பொறிபுலன் கரணங்கள் புகல்சிவ பரனென்னும்...........*
பொருவற விழித்தானென் றிடுபகடி............................*
பொருவில்லா வொளியாகிப் புரையற நிறைந்துள்ள....*
புரணமே யானேமென் றிடுபகடி.....:...........௩, ஆகூ ௪௭௮.

பகடிமுற்றிற்று.

---

௬௧-வது

# சுரூபானந்தசுவாமிகள் கழல்.

---

## கலித்தாழிசை.

ஒன்றியசிந்தையுளொன்றுய்நிகழுமே - யின்றென்னையாண்
டவனின்பக்கழ-லிதுவென்னவொன்றுதவிறைவன்கழல் (௧

இருந்தநி கொண்டேன் பிறவிநோய் நீர-மருந்தாகி மண்
ணின்மேல்வந்தகழன் - மற்றொன்றமில்லாதவள்வல்கழல்(௨

முத்தி யடியேன்கண் முன்னே நிகழ்ந்திட- வெத்தியெனை
யாண்டவின்பக்கழல்-யெல்லாமா யல்லாவிறைவன்கழல்.(௩)

நாநா விதந்நிர நாடரி தாய்வெறுந் - தானகத் தந்த
தலைவன்கழற் - றுவா மறைதேர் தனிப்பொற்கழல்... (௪)

அஞ்சாதே யென்றவ் வரந்தை யழியவென் - குஞ்சிமேல்
வைத்த குரவன்கழல் - கூற்றத்தைக்கொன் றகுழகன்கழல் (௫)

ஆறும் படிநல்கி யாறு நெறிகளும் - வேறின்றி நின்று
விளங்குங்கழன் - மெய்யுணர் வாய்நின்ற வீரல்கழல்...(௬)

ஏழை யடியே னெழுபிறப் புங்கெட - வூழி முதல்வ னு
ணர்த்துங்கழ - லுணர்வான வானந்த வுண்மைக்கழல் ..(௭)

என்னு வமரர்க்கு மெட்டரி தாகியென் - கண்ணுன கண்ணு
ரமிர்தக்கழல் - கடையேனை யாண்ட கருணைக்கழல்......(௮)

ஒன்னுரு முற்றுரு மில்லா வகையென்னைத் - தன்னுகத்
தந்த சதுரன்கழல் - சங்கை யறுக்குந் தலைவன்கழல் (௯)

பத்தி யடியவர் சித்தத்து ளேநின்று - தித்தித்தமிர் தூறுந்
தெய்வக்கழல் - சிற்சுரு பானந்தர்செம்பொற்கழல்.. ......(௰)

கழல்முற்றிற்று. ஆ௱௬௮அ.

---

௬௨-வது.

ஸ்வரூபானந்தஸ்வாமிகள்.

# அம்மானை.

---

இரட்டைக்குறள்வெண்செந்துறை.

அஞ்சின் பிணக்கை யறுக்கலா மம்மானை.........................❊
யன்னிய மொன்றற் றிருக்கலா மம்மானை......... ..........❊
துஞ்சும் பிறவி துடைக்கலா மம்மானை........................ ❊
சுரூப னடியிணை சூடினு லம்மானை........................ (௧)

கண்மூடிக் கான நிறையபார்கா னம்மானை........................❊
கண்மூடு வார்தம்மைக் காணுர்கா னம்மானை.... ..... .......❊
விண்மூடுஞ் சோதி விளங்குமே லம்மானை........ ..........❊
விழியா துறங்கா திருக்கலா மம்மானை.... ...................(௨)

காலதிசை தேசங்கள் கண்டோநா னம்மானை ..................❊
கானுநமை யவைதாங் கானுகா னம்மானை.... ...............❊
கோல மறிவல்லி தில்லைகா னம்மானை...........................❊
கொள்கைகொள் ளாமை குலைந்தோங்கா னம்மானை. (௩)

அல்லும் பகலு மறியோங்கா ணம்மாணை.......................*
யானந்த மேவடி வானோநா மம்மாணை...... ................*
சொல்லும் பொருளுங் கடந்தோநா மம்மாணை... ... ... *
சுருபானந் தத்தின் சுதந்திரமா மம்மாணை, ௬, ஆ௨ ௬௬உ.

அம்மாணைமுற்றிற்று.

---

௬௨-வது, பந்து.

இஃது.

# சிவப்பிரகாசஸ்வாமிகள்

## ஸ்வரூபானந்தஸ்வாமிகளது.

எண்சீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்.

ஓதா ரணங்க ளுயர்ந்து போற்று.................. ............*
முண்மை யுணர்விவ் வுலகுக் கெல்லா.................................*
மாதார மரிய வப்பொ ருளே.............................................*
யருளே வடிவா யெழுந்த ருளி. ....... ........ .. ............*
யூதாரி யாப்நா னழியா வண்ண..... ..............................*
முச்சியின் மேலே யுவந்து வைத்த........ ......................*
பாதார விந்தங்கள் பாடிப் பாடிப்.... ...........................*
பந்தடிக் கவ்வாரீர் பாவை நல்லீர் ........ .............. .....(க)

கொடியிடை யார்கனி வாயுங் கண்ணுங்........................*
கொங்கையு மென்று குலாவு மாந்தர்.................. .....*
நொடியிடைப் பட்டு நடங்கு வேனை......................... ..........*
நோவாமே நோக்கியென் னோரா வுள்ளச்............ ... .....*
செடியிடை வந்து புகுத நல்கிச்.............................. ...*
செய்ய சிவப்பிர காச விந்தப்.......................................*
படிமிசை வந்த பரிசு பாடிப்...................................... ...*
பந்தடிக் கவ்வாரீர் பாவை நல்லீர்.............................(உ)

பெண்பை யுதிரச் சிறையிற் புக்குப்..... ..........................*
பெருந்துய ரெய்திப் பிறந்துண் டாகும்....... ...................*

புன்பையை நானென்று போற்றி மாய்ந்து.... .. ........※
புழுவார் நரகிற் புகுத வேணை........ ....................... ※
பொன்பை யரவணை யோனுங் காணு..........................※
வொண்மலர்ப் பாதங்கள் சூட்டி யாண்ட......................※
பன்பை நிணைந்துகண் ணீர்த தும்பிப்........................※
பந்தடிக் கவ்வாரீர் பாவை நல்லீர்..........................(௩)

அந்தர வானத் தவருங் காணு...... ............................ ......※
வந்த வொளியி லசைவொன் றின்றிச்...... ......................※
சுந்தர வேடம் புணர்ந்த ருளிச்........................ .........※
சுரூபானந் தனென் றுயரந் நீரச்........................ ... ......※
சிந்துரச் சேவடி சென்னி சூட்டிச்...............................※
செய்ய திருவாய் மலர்ந்த போதே...............................※
பந்தணை தீர்ந்த பரிசு பாடிப்.............. ......... .... . ※
பந்தடிக் கவ்வாரீர் பாவை நல்லீர் ................. .........(௪)

வேதமு மாகம கீதை களு................. ................. ... ※
மிருதி புராணமும் வேத மார்க்கர்................................※
வாதமும் வல்லவ ருள்ளத் துள்ளு.... ..... ............. .. ...※
மன்னியுந் தோன்றாத வள்ளல் வந்து.... ..... ..................※
பூதமும் பவுதிகந் தானு மற்றும்....... ...................... ※
போதமே யாகிப் புரிந்து தோன்றிப்.............. ... ..........※
பாத மளித்த பரிசு பாடிப்...................................... ......※
பந்தடிக் கவ்வாரீர் பாவை நல்லீர்....... .......... ........(௫)

ஓரவுஞ் சொல்லவு மொண்ணா தென்ன............. ........※
வுபநிட முள்ளத்திற் றானு மன்பு..................................※
கூரவுங் கூறு மிறைவன் வந்து..... ...... ........................※
கொடுவினை பேணையாட் கொண்டா னென்று............ ※
வாரவ விங்கிவ ஞானொன் றேந்தி.... ..................................※
யங்கையோ டங்கை யடித்து நக்குப்..............................※
பாரவ ரோசும் பரிசு பாடிப்............................... .....※
பந்தடிக் கவ்வாரீர் பாவை நல்லீர்............ ... .........(௬)

நிருகா வொருகாலுஞ் செவ்வி தாகாச்.... .......................※
சித்தந் திரித்த நிறத்தை யுன்னி..... ...... ... ...................※

யுருகா வருவி சொரியக் கண்க.... ...............................※
ளுயரா விழியா வொழியா வென்று...............................※
மருகா பெருகா வழியா வாகா.............................. .... ..※
வறுகா வகலா வயரா வுன்னுப் ...............................※
பருகா வமிர்நினைப் பாடிப் பாடிப்........................ ...※
பந்தடிக் கவ்வாரீர் பாவை நல்லீர்............................(எ)

ஏதாதி யேதந்த மென்று தேடு .................... ..................※
மிமையவ ரேமாந்து நிற்க வின்னம்........................ ..........※
வேதாதி நாவால் விளம்ப வொண்ணு ................. ...........※
மெய்ப்பொருண் மானிட வேடஞ் சாத்திப்..........................※
பேதாதி பேத மிலாத தன்னைப்.... ... .............. ..........※
பெறவ் ருள்செய்த பெருந்த கையைப்........ ........ .........※
பாதாதி கேசம் பரவி நின்று..... .... .... ................. .........※
பந்தடிக் கவ்வாரீர் பாவை நல்லீர்................... .........(அ)

அந்தமு மாதியு மில்லா வொன்றென்.... . .........................※
ளுரண மோது மதுவே யன்றிச்...............................................※
சந்தமி தென்னவொன் ணுதே யென்னுந்........................ ..※
தம்பிரா னென்னைத்தா னுக்கி யென்னுற்............. .... ..※
செந்தமிழ் மாலை புனைந்து கொண்டே .........................※
செய்ய சுரூபன் திருவ ருளாற்............. ............................※
பந்தமும் விடுமில் லாமை பாடிப்.....................................※
பந்தடிக் கவ்வாரீர் பாவை நல்லீர்.............. .............(௯)

சாத்திரங் கற்ற சதுர ரெல்லாந்... .............. ......... ....... ※
தத்துவ மொன்று பலவ தென்று............ .......................※
காத்திர மாசக் கழிந்து போகக்.......................... ........※
கருணைக் கடல்கண்ணிற் காண வந்து......... ................. ※
நாத்திரங் கத்தன் புகழே பாடி.................... . ...................※
நற்றெண்டு செய்நிட நாயே னையும்........... ... ...........※
பார்த்தருள் செய்த பரிசு பாடிப்.. ................. .... .........※
பந்தடிக் கவ்வாரீர் பாவை நல்லீர்............................(௰)

தோதி யாதி யழியு மென்னைச்............... ........ ........※
செய்ய கருணையாற் சிசி யிங்கு.................................. ...※

றுகாது காணென் றருளிச் செய்தே....... ... ... ..... .....※
யைம்புலத் தாஸம் பொறியை நோக்கிப்...................※
போகாத வண்ணம் புரிந்து நோக்கிப்.................. .........※
போதப் பெருங்கண் பொருந்தத் தந்தப்........ ...............※
பாகார் மொழியிணைப் பாடிப் பாடிப்.............................※
பந்தடிக் கவ்வாரீர் பாவை நல்லீர்.... .........௰௧, ஆ௨டு௱௩.

பந்துமுற்றிற்று.

௨௩-வது

## பாங்கிக்குரைத்தல்.

அடி-நான்காய்த்தம்மிலொத்துவந்த
இரட்டைக்குறள்வெண்செந்துறை

சொல்லெல்லா நாத மென்னவும் பெற்றேஞ்..........※
சும்மா விருக்கை தொழிலாகப் பெற்றே......................※
நல்லவ னன்பரு ளுஞ்சேரப் பெற்றே..... ............... ....※
நாயனார் தாந்தந்த வாழ்விது பெண்ணே............ ......(௧)

படுக்கை படுதரை யாகவும் பெற்றேம்......... ...... .....※
பாணியி லேபலி கொள்ளவும் பெற்றே.......................※
முடுக்கையுங் கோவண மாகவும் பெற்றே ..................※
மொன்றுங் குறைநமக் கில்லைகாண் பெண்ணே.........(௨)

எல்லாரு நம்மை யிகழ்ந்திடப் பெற்றே.....................※
மிம்மை மறுமையச் சங்கெடப் பெற்றே .....................※
நல்லான் மலரடி நாஞ்சூடப் பெற்றே ........................※
நாயனார் தாந்தந்த வாழ்விது பெண்ணே....................(௩)

வேண்டாமை யென்னும் விழுச்செல்வம் பெற்றேம்......※
வேண்ட லெனும்பிணி வேரறப் பெற்றே....... ......... ....※
மாண்டவ னென்றுகு மன்பிணைப் பெற்றே ...............※
மையோ விதென்ன தவஞ்சொல்லாய் பெண்ணே...... (௪)

எய்ப்பற்ற சீரை யுடுக்கவும் பெற்றே ... .......................※
மெங்கனு முள்ளாண யாமெனப் பெற்றேம்..............※

பொய்ப்பத்தி மெய்ப்பத்தி யாகவும் பெற்றேம்............❊
புண்ணிய னீர்தந்த வாழ்விரா பெண்ணே ... ௫, ஆ௨ ௫ ௪.
பாங்கிக்குரைத்தல்முற்றிற்று.

---

௪௫ - வது.

# ஸ்வரூபானந்தஸ்வாமிகள்
# வியந்துரை.

---

அடிநான்காய்த்தம்மிலொத்துவந்த
இரட்டைக்குறள்வெண்செந்துறை.

பார்த்த பிறப்பற்றுப் பார்ப்பா னும்போய்ப்...............❊
பாராப்பத் றற்றபா தத்தைப் பார்த்து ......................❊
வாழ்த்தவா ரீர்பெண்காள் வாழ்த்த வாரீர்.....................❊
வரமாஞ் சுருபனை வாழ்த்த வாரீர்............................(௧)

தோற்றமே லாந்தாமே யாகும் வண்ணஞ்...........................❊
சொன்ன விரகினைச் சொல்லிச் சொல்லிப்....... ................❊
போற்றவா ரீர்பெண்காள் போற்ற வாரீர்.......... ..... ..❊
பொருவில் சுருபனைப் போற்ற வாரீர்......... .............(௨)

ஊற்றமெல் லாமுடைந் துக்கு நைந்திங் ....... ..............❊
குரைமாண்ட பேரின்பத் துய்த்த வெள்ளஞ்......................❊
சாற்றவா ரீர்பெண்காள் சாற்ற வாரீர்.......................... ..❊
தற்சுரு பன்பொற்றாள் சாற்ற வாரீர் ........ .................(௩)

ஓர்க்கொணு வின்பமோர் மாத்தி ரைக்கு .......... ..........❊
ளொவிர்வித்த வல்லப முன்னி யுன்னி..............................❊
யார்க்கவா ரீர்பெண்கா ளார்க்க வாரீ..... ................ ........❊
ரழகார் சுருபனென் றார்க்க வாரீர்.... .......௪, ஆ௨ ௫ ௪ ௨.

---

வியந்துரை முற்றிற்று.



உ

கணபதிதுணை.

## ௬௬-வது, சுதந்தரன்.

இரட்டைக்குறள்வெண்செந்துறை.

ஏழை யேர்கெளி வந்த சுதந்தர......................................※
னென்ன ரெண்ணிவெட் டாத சுதந்தரன்..............................※
வாழ நாமுமெல் லாமடி யாருடன்......................................※
மனித னுய்வர வல்ல சுதந்தரன் .....................................(௧)

கருது தற்குமெட் டாதவ னைப்புலன்....................................※
கான வேவர வல்ல சுதந்தர.............................................※
னெருது வட்டமிட் டேகழி யாவனை.....................................※
மென்னை யாட்கொள வல்ல சுதந்தரன்.................................(௨)

மூவ ரோடுமுப் பத்துமுக் கோடிமா.....................................※
முனிவ ருக்குமெட் டாத சுதந்தரன்.....................................※
பாவி யேனை வலிவந் தென்னையும்.....................................※
பார்வை தானறப் பார்த்த சுதந்தரன்...................................(௩)

சதுரி ழந்தழு மன்பர்த மன்புளே.......................................※
தானி ருந்தழ காருஞ் சுதந்தர.........................................※
னதிரு தன்கழல் சென்னிவைத் தென்னையு.............................※
மன்ப ரோடுவந் தாண்ட சுதந்தரன்...........௪, ஆடி ஞாயிசு

சுதந்தரன்முற்றிற்று.

## ௬௭-வது, தெய்வம்,

இரட்டைக்குறள்வெண்செந்துறை.

பந்தமறப் பார்த்தருளிப் பாதமலர் சூட்டிப்.........................※
பார்ப்பதறத் திரித்தருளிப் பாரென்று நேரோ.........................※
சிந்தையுள்ளே காட்டித்தந்த தெய்வங் கிடேர்தெய்வஞ். .※
சிஞ்சிதப்புப்போற்றுந்தெய்வந் தெய்வமன்று சிடிகோள்.

நடுக்கமிகு முடம்புதனை நடத்திக்கொடு திரிந்து............※
நாசம்வந்த போதாக நானென்செய்வே னென்னுந்.......※
நடுக்கங்கெடப் பண்ணியிடுந் தெய்வங்கிமேர் தெய்வஞ்.....※
சிஞ்சிதுப்புப்போற்றுந்தெய்வந் தெய்வமன்றுசிடிகோள்
தெய்வமுற்றிற்று. உ,அ௲௫௱௫௰அ,

௬அ-வது.

ஸ்வருபானந்தஸ்வாமிகள்.

## சிவப்பிரகாசஸ்வாமிகள்

இறைவல்லபம்.

அடி நான்காய்த் தம்மிலொத்து வந்த
இரட்டைக்குறள்வெண்செந்துறை.

பந்தனை யெல்லா மொருங்கும் படிசெய்ய...............※
பங்கயக் கண்வைக்கவும்.....................................※
பார்த்த பார்வையே பார்க்கும் படிசெய்ய ...................※
பாத மலர்வைக்கவுஞ்.............................................※
சிந்தை யழித்துச் சிவமாக்கி யிங்ஙனே......................※
தித்திக்கு மாவைக்கவுஞ்... ......................................※
செய்ய சுரூபனுக் கல்லது வேறொரு............ ..............※
தேவராற் செய்யலாமோ...........................................(க)

அழிவின்றி யென்று மொருதன் மையினின்......... .......※
றருண்மேனி கொண்டிடவு.........................................※
மண்டரும் பண்டை யருமறை யுந்தேட......................※
வாயா வெனையாவவு.... ...........................................※
மொழியு மனமுங் கடந்த தமையென்கண்...................※
முன்னே நிகழ்ந்திடவு.... ..........................................※
முற்று மொழியாச் சுருபனுக் கல்லது.................. .....※
மூவராற் செய்யலாமோ ............... ... ....................(உ)

காணும் பொருள்களுங் கண்ணுகக் காணும்.......... ........※
படிகடைக் கண்வைக்கவும்.........................................※
காட்சியு மாட்சியு மற்ற தமையிலங்ன்....... .................※
காணக் கழல்வைக்கவும்.... .......................................※

பேணு மடியா ருளத்தைக் கனத்திங்ஙன்........ ....... ✽
பிச்சாடத் தான்வைக்கவும் ....... .......... ....... ....... ✽
பேரின்ப நாதனூர்க் கன்றிமா லீசன்...... ...... ...... ...... ✽
பிரமனூற் செய்யலாமோ..................... .................. (௬)

கள்ளப் புலனுங் கரணங்க ளுள்குங்... ........................ ✽
கருத்தழிந் தோடிடவுங்....................... ..................... ✽
கருத்தழிந் தோடித் திரிந்திட் டவையெலாங்.... .......... ✽
கணனேகண் ணுக்கிடவும்..... ................ .................... ✽
தெள்ளத் தெளிந்து செயலுஞ் சிவமாகச்..................... ✽
செய்யாமை செய்திடவுஞ்................. ...................... ✽
சிவப்பிர காசனூர்க் கல்லது வேறொரு...... ................ ✽
தேவராற் செய்யலாமோ.......... .............. ......௬, ஆ௨௫௨.

இறைவல்லப முற்றிற்று.

---

௩௫ - வது, பவகதி.

---

அடிநான்காய்த்தம்மிலொத்துவந்த
இரட்டைக்குறள்வெண்செந்துறை.

சந்தமொன் றின்றி யிருக்க வேண்டுந்......................... ✽
தானே யழகிய னாக வேண்டு.............. ... ........ ...... ✽
மிந்த வுடம்பிலே காண வேண்டு............................... ✽
மெங்குந்தா னாகி யிருக்க வேண்டும்....... ............ ....... (௧)

காட்சியொன் றின்றி யிருக்க வேண்டுங்...... ............ ✽
கரத்தின் மணிபோலக் காண வேண்டு...................... ✽
மீட்சி செலவற் றிருக்க வேண்டும்..... .................... ✽
விடாதே பற்றுதே யிருக்கவேண்டும்............... .......(௨)

உள்ளதெ லாந்தானே யாக வேண்டு.............. ......... ✽
மொன்று மின்றிற்கே யிருக்க வேண்டுந்... .............. ✽
தள்ளினும் விள்ளா திருக்க வேண்டுந்.............. ..... .. ✽
தழுவின ரோதான் றழுவ வேண்டும்........................(௩)

வித்தின்றி யேநாறு செய்ய வேண்டும்......... ........ ..... ✽
விளையாதே யெல்லாம் விளைக்க வேண்டுஞ்.... ............ ✽

செத்தின்றி யேசெத் திருக்க வேண்டுந் ..................... ....*
செயலுஞ்செய் யாமையுந் தீர வேண்டும் ... ....... ......(ச)

அழியாத தாகாத தாக வேண்டு....... ..............................*
மன்னிய மாகியொன் ருக வேண்டும் .... ....... ...... ..........*
விழியா திமையா திருக்க வேண்டு...................................*
மெய்யும்பொய் யும்மற் றிருக்க வேண்டும்...............(ரு)

அல்லும் பகலு மொழிய வேண்டு ... .............. ..........*
மறிவ்றி யாமை யொழிய வேண்டுஞ்........ ......... ..........*
சொல்லும் பொருளு மொழிய வேண்டுந்..........................*
*தூரிய தாயன்னி தாக வேண்டும்...........................(சா)

உள்ளும் புறம்பு மொழிய வேண்டு............................. *
முறங்கி யுறங்கா திருக்க வேண்டும்......... ...............*
வெள்ள வெளியா யிருக்க வேண்டும்.................. ... ....*
விளங்க வெளிதா யிருக்க வேண்டும்...... .....எ, ஆ௨டுஉகூ.

பவகதிமுற்றிற்று.

எ௰-வது, வாழ்க்கைப்பாடு.

இரட்டைக்குறள்வெண்செந்துறை.

தன்னிலே யெல்லா மிருக்கு மாகிற்........ ................ .....*
லுனெல்லாத் தன்னை யிருப்ப னாகிற்.................. ..........*
பின்னிலன் முன்னில னுவ னாகிற்........................ ........*
பெரிது முடிந்ததென் வாழ்க்கைப் பாடே ..................(க)

குணக்குன்று தானு யிருப்ப னாகிற் ... ................. ,......*
குணமிலி தானு யிருப்ப னாகி... .... ............. .... ... ... .*
இணக்கொன்று மின்றி யிருப்ப னாகி..............................*
இன்றே முடிந்ததென் வாழ்க்கைப் பாடே ...............(உ)

அண்ட மனுவாப் பெரிய னாகி...................................*
லனுவண்ட மாகச் சிறிய னாகிற்....................... ............*
கொண்டார்கள் கொண்ட வடிவ னாகிற்............. ............*
கூடி முடிந்ததென் வாழ்க்கைப் பாடே........................(௩)

* அரியது தூரத்தது - சேய்மை.

நல்லதுந் தீயது மல்ல னாகி.................................*
னானுந்தா னாகி யிருப்ப னாகி.................................*
யில்லது முள்ளது மல்ல னாகி.................................*
யின்றே முடிந்ததென் வாழ்க்கைப் பாடே.................(௪)

ஒளியா யிருளா யிருப்ப னாகி.................................*
யுருவா யருவா யிருப்ப னாகிக்.................................*
களியாக் களியா யிருப்ப னாகிக்.................................*
கடிதின் முடிந்ததென் வாழ்க்கைப் பாடே.................(௫)

ஓரா யிரம்பே ருடைய னாகி.................................*
யுண்மைக் கொருபேரு மில்லை யாகில்.................................*
வாராதே நம்பால் வருவ னாகில்.................................*
வந்து முடிந்ததென் வாழ்க்கைப் பாடே.................(௬)

இருக்கச்செய் தேயெங்கும் போவ னாகி.................................*
யிருமைமூப் பின்றி யிருப்ப னாகி.................................*
யொருக்கற்குந் தானொளி யாவ னாகி.................................*
யன்றே முடிந்ததென் வாழ்க்கைப் பாடே.................(௭)

சொல்லாதே சொல்லி யிருப்ப னாகிச்.................................*
சுகசுந பன்னு யிருப்ப னாகி.................................*
யெல்லாமா யல்லா திருப்ப னாகி.................................*
யின்றே முடிந்ததென் வாழ்க்கைப் பாடே.................(௮)

கண்ணின்றி யாவையுங் காண்ப னாகிக்.................................*
கையின்றி யேகைப் பிடிப்ப னாகி.................................*
யெண்ணிய னயதி தார னாகி.................................*
யன்றே முடிந்ததென் வாழ்க்கைப் பாடே.................(௯)

வித்தின்றி யேநாறு செய்வ னாகில்.................................*
விளையாதே போகம் விளைப்ப னாகிச்.................................*
சத்திய மும்பொய்யு மல்ல னாகிச்.................................*
சால முடிந்ததென் வாழ்க்கைப் பாடே.................(௰)

எக்காலு மென்றுங் கெடாத வன்னே.................................*
யெப்பொரு ளுந்தந்த வப்பொ ருளே.................................*
*துக்காய்ப் புகுந்துநின் ருட வேண்டுந்.................................*
தோந்தசி யென்றுநின் ருட வேண்டும்......௰௧, ௮௫௪௰.

(*துக்கம்) வாழ்க்கைப்பாடுமுற்றிற்று.



உ

கணபதி துணை.

# ஏக-வது, சந்நியாசம்.

எண்சீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்.

செந்துகி லுந்தண்டு நீர்தரித்துச்-சிகைநா றெசித்துச்
செப்ங்கள்பண்ணி, முந்திநீர் நீரிவிற்காக்கைபோல முழுகித்
திரியும்பிடாரநீரே, பெந்தகாயம்மல நீரின்மூழ்கிப் - பிரள
யகாலஞ்செபித்தக்காலும், வந்துணர்வாயபிரமமாமோ - மதி
த்துநீர்பாரீர்பிடார*நீரே..... ....... ...............................(க)

காமியகன்மபாவம்பவத்தின்காரணமாமென்றுகட்டுரைத்து
மேமமுன்றுமபிசராசமாதி யுற்றுநீர்செய்யும்பிடாரநீரே
யாமதோன்றில்லைமுன்புள்ளதன்றி யவற்றுவிகழ்கன்மமா
யுமக்கே, யெமமில்லாப்பவமெய்திடாதோ வெங்ஙனேசொல்
விர்பிடாரநீரே.......................... ........ ......... ........(உ)

அன்னமயமாதிகோசமெல்லா - மகத்துளேயாகுதிசெ
ய்துதாய்தாய்ச், சொன்னமறையையுரைத்துநெய்யைத் - த
ழலிற்சொரியும்பிடாரநீரே, யன்னியமாயவியுநெருப்பி - லா
குதியால்வைபோயகல, மன்னியபோதப்பிரமமாமோ - மா
சறப்பாரீர்பிடாரநீரே . . .. ... ...... ........................ ......(௩)

குந்திமிதித்துக்குலங்கடுரக் - கொள்ளமண்ணாலுடறா
ய்மைசெய்து, சிந்துவுஞ்சேதுவுங்கங்கையாறுந் - தேடியே
யோடும்பிடாரநீரே, யிந்தவுடலாமலக்கடத்தை - யெத்தனை
நீர்த்தநீராட்டினாலு, மந்தமில்போதப்பிரமமாமோவாய்ந்
துநீர்பாரீர்பிடாரநீரே ............................................. (௪)

எடுகொண்டுபாடையேறரவு - மிடையின்றியெல்லையி
ல்சாத்திரங்கள், பாடமதோதித்தவைபறியப் - பகருதற்கோது
ம்பிடாரநீரே, தேடுமுள்ளத்துக்குமோர்வரிய - சிற்சுரூப
மன்னகாரியமோ, பாடமதோதிப்பலிப்பதுண்டோ - பழுதற
ப்பாரீர்பிடாரநீரே..... ....... ......... . ......... ................(௫)

---

* நீரேயென்பது - நீரேயெனவிகாரமாயிற்று. ※பிடாரர்பாம்பாட்டிவேஷகாரர்.

செந்துகிறண்டுதரித்தருனென் - செபித்து விரல்கண் மூடக்கருனேன், மூந்துநீர்சிந்தித்தன்மூழ்கருனேன் - முண்டித்தலென்சடைகட்டருனெ, னந்தமொன்றில்லாவமலமாய வாதிப்பிரமமகமதனு, விந்தச்※ சடஙகுகள் வேண்டுமோதா - னெங்ஙனேசொல்லீர்பிடாரநீரோ.................. ௬, அடி ௧௬.

சந்நியாசமுற்றிற்று.

---

௭௨-வது, தண்டு.

இஃது

## ஸ்வரூபானந்தஸ்வாமிகளது.

குறள்வெண்செந்துறை.

கோணுந்தண்டன்றெங்கடண்டுகுருகாட்டிற் காணலாந்தண்டு,
காணுந்தண்டன்றெங்கடண்டு - கண்ணுகியவேகதண்டே.....(௧)

மூன்றுதண்டன்றெங்கடண்டு - மூலமாந்தண்டெங்கடண்டு. ※
தோன்றுந்தண்டன்றெங்கடண்டுசுருதிமுடிசொன்னதண்டே

மடம்புகுதாதெங்கடண்டு - வைத்துவாங்காதெங்காண்டு.....※
சடம்புகுதாதெங்கடண்டு - சச்சிதானந்தமாந்தண்டே.... (௩)

மரத்தண்டலவெங்கடண்டு - மதியுள்ளவர்கொள்ளுந்தண்டு..※
வுரத்தண்டந்தாங்கியதண்டு - வுணர்வாகியுவேகதண்டே. ..(௪)

சமயத்தைச்சாடிபதண்டு - சகலமுந்தாங்கியதண்டு............※
சுமையற்றிருக்கின்றதண்டுசுரூபானந்தனூர்தந்ததண்டே (௫)

தண்டுமுற்றிற்று. ௫, அடி ௰௧.

---

## ௭௩-வது, தபோவனம்.

இரட்டைக்குறள்வெண்செந்துறை.

ஆரணக்கிளி கொஞ்சு தபோவன.......... ..........................※
மாசமர்குயில் கூவு தபோவனம்...... ...............................※
பூரணத்தரி வாழு தபோவனம்...............................................※
பொருவில் சிற்கன மாய தபோவனம் .......................(௧)

---

※ சடங்கு - வினசெய்கை.

சமயி கட்கதி தூர தபோவனஞ்............................✻
சமை தமைத்திரள் சார்வ தபோவனம்...................✻
நமையு மிப்படி வைத்த தபோவன.........................✻
நாத னரு ளாய தபோவனம்..................௨, அ௨௫௫.

தபோவனமுற்றிற்று.

---

## ௭௪ - வது, ஊர்.

---

இரட்டைக்குறள்வெண்செந்துறை.

உலக முழுது முதித்திட மெங்களு...........................✻
ரொருதே வையு மற்றிட மெங்களூர்..........................✻
கலிகா நிலை யாகிய தெங்களூர்...............................✻
கரு ணாகர னார்கழ லெங்களூர்...........................(௧)

இந்தி யக்கள்வர் சேர்வில தெங்களு.........................✻
ரின்ப நற்பயி ரோங்கிய தெங்களூர்..........................✻
பந்த மற்றவர் பற்றிட மெங்களூர்............................✻
பார்வை யற்ற பரம்பொரு ளெங்களூர்.....................(௨)

விரகர்க் கதி தூரம தெங்களூர்...............................✻
விமலர் கட்கணி தாகிய தெங்களூர்..........................✻
துரி யத்தொளிர் சோதிய தெங்களூர்.........................✻
தூய்ய நற்கரு ணைக்கழ லெங்களூர் ............௫, அ௨௫௬.

---

ஊர்முற்றிற்று.





உ

கணபதி துணை.

எ௫-வது.

# இருபிறப்பாளர்.

இஃது.

# சிவப்பிரகாசஸ்வாமிகள்

## ஸ்வரூபானந்தஸ்வாமிகளது.

அடியிரண்டாய்த்தம்மிலொத்துவந்த
குறள்வெண்செந்துறை.

ஒன்பதுவாசலுடையகுடிலையுருவென்றுகொண்டிடாதே ※
யின்பவறிவேவடிவானாரன்றேயிருபிறப்பாளராவார்.....(க)
[ திடாதே

குப்பையாமிந்தக்குரம்பையைத்தாமென்றுகோலங்கள்செய்
யிப்பையைநீத்தறிவானவரன்றேயிருபிறப்பாளராவார் (உ

பொன்றுமுடம்பளவாகியிருப்பாரும்பூசுரராவார்களோ..※
வென்றுமுளவறிவானவரன்றேயிருபிறப்பாளராவார்..(௩)

பொல்லாவுடம்பளவாகியிருப்பாரும்பூசுரராவார்களோ.. ※
வெல்லாமுந்தாமாயிருப்பவரன்றேயிருபிறப்பாளராவார்௪

புழுவார்குரம்பைதாமாகியிருப்பாரும்பூசுரராவார்களோ. ※
வெழுவாயிறுவாயிலாதவரன்றேயிருபிறப்பாளராவார்(௫)

முப்போதுநீரின்முழுகித்திரிந்தான்முனிவர்களாவார்களோ
விப்போதேமுத்தியடைந்தவரன்றே யிருபிறப்பாளராவார்

உளமதொருங்கவொருக்கியுபநிடத் துச்சத்தொருபொருளா
யிளமைமூப்பின்றியிருந்தவரன்றே யிருபிறப்பாளராவார்

பருக்குமெலியுமிப்பாழுடற்காகப்பரந்துதிரிந்திடாதே...... ※
இருக்கின்முடிமேலிருப்பவரன்றேயிருபிறப்பாளராவார்(அ)

மறப்புநினைப்புமிலாதவறிவேவடிவாய்மறந்துமினி....... ※
யிறப்பும்பிறப்புமிலாதவரன்றேவிருபிறப்பாளராவார் (௬)

சிந்தைநோய்நிரச்சிவப்பிரகாசன்றிகழத்திகத்தவல்ல......※
வெந்தைசுரூபன்கழல்சூடிலன்றேவிருபிறப்பாளராவார் (௭)

இருபிறப்பாளர்முற்றிற்று. ஆ_௫௬௬.

---

## எசு - வது, சிகை.

---

குறள்வெண்செந்துறை.

※வந்தாவொருகத்தியினுவேவைக்கின்றமயிர்ச்சிகையன்று※
சித்தாயுரவெப்பொருளுக்குஞ் சிகையாவதுவேசிகைதானே,

சினைக்கின்றமயிர்ச்சிகையன்று சிகையாவதுசித்துருவாகி..※
யுளைக்கின்றவெணைப்பொருளுக்கு - முச்சத்தொளிர்வுற்றது
(தானே. (௨)

மரிக்கின்றவுடம்பிலெழுந்துமாள்கின்றமயிர்ச்சிகையன்று※
தரிக்குஞ்சிகையாவதுமேலாய்த்தனதும்பரிலாததுதானே(௩

சிக்குற்றெரியிற்சுறுநாறுஞ் சிகையன்றுசிகிச்சிகைபோலே
யொக்கத்தனில்வேறறவொன்று - யுச்சத்தொளிருஞ்சிகைதா
(னே (௪)

மயிரின் சிகைநன் சிகையன்று - மாயா மயமா கிவிரிந்த※
வுயிருமுலகும்பரமும்போ யுச்சத்தொளிருஞ்சிகைதானே※

சிகைமுற்றிற்று. ௫, ஆ_௫௭௬.

---

## எஎ-வது, பூணூல்.

---

இரட்டைக்குறள்வெண்செந்துறை.

புரத்தாற் றிரித்தமெய்ப் பூணுநூ லெங்கணூல்............※
போதமுடையவர் போற்றுநூ லெங்கணூல் ..............※
கரத்தாற் றிரிக்கப் படாதநூ லெங்கணூல்... ................※
கருத்தைத் திரித்திறை காட்டுநூ லெங்கணூல்..........(௧)

கார்ப்பாசத் தாற்றிரி யாதநூ லெங்கனூல்.....................✻
கண்ணோகண் ணாகத் திரிக்குநூ லெங்கனூல்.....................✻
வேர்ப்பாய் வெளுப்பிக்க வேண்டாநூ லெங்கனூல்......✻
வேதாந்த நூலாய் விளம்புநூ லெங்கனூல்..............(உ)

காத்திரத் திற்பூண் டிடாதநூ லெங்கனூல்......................✻
கழியா திடாதே யிருக்குநூ லெங்கனூல்..........................✻
சாத்திர வாயர் தரியாநூ லெங்கனூ .............................✻
றம்மை யுணர்ந்தோர் தரிக்குநூ லெங்கனூல்.............(௩)

ஊனக்கண் ணாற்காண வொண்ணாநூ லெங்கனூ ..........✻
வுடம்புடன் ருக்கொன் றிலாதநூ லெங்கனூல்...............✻
ஞானக்கண் ணாற்கா ணாகுநூ லெங்கனூ......................✻
ணநாவிதத்தை யறுக்குநூ லெங்கனூல்.......................(௪)

கோத்தெல்லாந் தானே யுருவுநூ லெங்கனூல்...............✻
குரம்பை யழுக்குப் படாதநூ லெங்கனூ ........................✻
லோத்தெலா மாகி முடிந்தநூ லெங்கனூ .......................✻
வுணர்சுரூ பானந்த வுண்மைநூ லெங்கனூல்டு, அ௨௱௭௫.

பூணுநூல்முற்றிற்று.

---

எ௰அ-வது,

# செட்டியார்.

இஃது.

# சுரூபானந்தசுவாமிகளது.

---

அடிநான்காய்த்தம்மிலொத்துவந்த
இரட்டைக்குறள்வெண்செந்துறை.

எட்டு மொன்பது மேழு மொன்றுமா .............................✻
யிருந்த பொன்னெடுத் துரைத்திச் செட்டியார்..............✻
தட்ட றக்கழஞ் சாக்கி னார்தாம்............................✻
வல்ல வல்லப மேயிந்தச் செட்டியார்..........................(க)

கடையி லேபதி ஞது மாற்றெக்கக்........ .... ................❊
கண்ணனி யாகக் கண்டு தந்தபொன்னுக்.......... ..........❊
கிடை யொன்றுங் காணேனன் செட்டீரோ.............. ......❊
யிதென்ன மாயஞ் சொல்லீர் செட்டீரோ .....................(உ)

உறமு யிர்பர முல்கே னும்பணி..............................❊
முன்றையு மொக்கத் தட்டு மாறி..................................❊
வெறுமொரு செம்பொன் ஞக்கிநீர் செய்த..... ..... .....❊
வித்தக மென் சொல்லீர் செட்டீரோ........ ..... .............(ஙு)

கடையிது மிருப் பாரிந்தச் செட்டியார்............. ..........❊
கண்டிட மெங்குமுன் னுவரிச் செட்டியா .......................❊
ரிடையிது மெல்லாங் கொள்வ ரிச்செட்டியா. ... . .........❊
ரெழிலா ருஞ்சுரு பானந்தச் ❊செட்டியார்..ச, அ௲டுஅ௰.

❊ பொன்வாணிபன்.

செட்டியார்முற்றிற்று.





உ

கணபதி துணை.

எகூ - வது, பெருமாள்.

இஃது:

## ஸ்வரூபானந்தஸ்வாமிகள்

# சிவப்பிரகாசஸ்வாமிகளது.

இரட்டைக்குறள்வெண்செந்துறை.

காவிநிசை தேசமெல்லாங் கடந்துநின்ற பெருமாள்.. .....*
கல்விக்கடல் வீழாமே காத்தருளும் பெருமான்............*
ஞாலமுயிர் பரமென்ன நடித்தருளும் பெருமான்.........*
ஞானவினே தப்பெருமா னம்முடைய பெருமாள்.......(க)

உவமைமிகு சமயங்க ளொழித்தருளும் பெருமா............*
ளொன்றுவுந் தமையாரு மொவ்வாத பெருமாள்.........*
கவலைமன மொருநொடியிற் கரிசறுத்த பெருமாள்.....*
கண்ணுக வேயென்னைக் கனாத்தருளும் பெருமாள்...(உ)

நாயேனைப் பொருளாக நயந்தருளும் பெருமா... .........*
னம்மைநம்பி லேநமக்கு நல்கியிடும் பெருமாள்..........*
பேயான வெனையாண்ட பெருங்கருணைப் பெருமாள்...*
பேணித்தொழு மடியவரைப் பித்தேற்றும் பெருமாள்(ஙு

தன்னடியே னெனவென்னைத் தாமளித்த பெருமா... ...*
டன்னைத்தான் றிருமேனி சாத்திவந்த பெருமாள்.........*
பொன்னடியென்சென்னியிலேபொறித்தருளும்பெருமாள்
புழுவின்றலை யபிஷேகம் புனைந்தருளும் பெருமாள்..(ச)

அந்தரமே போகாமே யாண்டருளும் பெருமா.. ............*
ளப்பொழுதைக் கப்பொழுது மாறாத பெருமா...........*
ளெந்தரமு முவந்தாள விசைந்தருளும் பெருமா..........*
ளிப்படியென் றியம்பரிய வின்பவெள்ளப் பெருமாள்(ரு)

கூள.

மூலப்பண் டாரத்தை வழங்கியிடும் பெருமாள்................❊
முத்திக்கிங் கெனைஞான முடிசூட்டும் பெருமா........ ...❊
ஞாலமாம் பவப்பகையை யறுத்துவிடும் பெருமா...... ❊
னடியிணைக டருஞ்சுரு பானந்தப் பெருமாள்...........(சு)

மாலயனுக் கெட்டாமை வளர்ந்தவ ரெய்பெருமாள்.......❊
வந்தென்னைக் குடியாக வாழ்வித்த பெருமாள்.... ........❊
காலையென் றலையின்வைத்த கன்னுடைய பெருமாள்...❊
கைக்கவியே யெனவென்னைக் காட்டியிடும் பெருமாள்(எ

இறந்துநான் பிறக்கின்ற விடர்தீர்த்த பெருமா........... .❊
விமையவர்க ளேமாக்க வெனையாண்ட பெருமான்........❊
மறந்துநான் பிறவாத வரந்தந்த பெருமான்.... .........❊
மாருதென் னுள்ளத்தே மகிழ்ந்திருந்த பெருமாள்..,..(அ)

ஆராத வன்புக்கே யகப்படுமெம் பெருமா.................. ❊
னகமறியைப் பிறர்க்கவித்திட் டாட்டியிடும் பெருமாள்❊
வாராதே வந்தென்னை வாழ்வித்த பெருமாள்.......... ....❊
மலர்ப்பதங்க டொழநல்ல மதிதந்த பெருமாள்..... ... .(கூ)

அடியவர்த மூளத்தச்சந் தவிர்த்தருளும் பெருமா.........❊
னஞ்சாதே யெனையாண்ட வான்பிள்ளைப் பெருமான்..❊
மிடியறவே யெனைப்பார்த்த வித்தகப் பெருமாள் .......❊
விழியாத வுறங்காத விழிதந்த பெருமாள்............... (ல)

திறலுறு பகைமூவர் குறும்பறுத் துலகேழுந்..............❊
திகழ்ஞானத் திருவாணை செலுத்தியிடும் பெருமா.........❊
னறிவுட னறியாமை கழலிக் கொளிரு. ....... ............❊
மழகாருந் தனையன்பர்க் களித்தருளும் பெருமாள் ...(லக)

வஞ்சவேட வன்னியரை வல்வினையால் வலிந்து..... ... .....❊
வன்பவபா சச்சிறையில் வைத்தருளும் பெருமா...........❊
னஞ்சுவன்ன பூதமா யிலங்கன் முழுது.................... ...❊
மறிவாகத் திகழ்செங்கோ லடத்தியிடும் பெருமாள் (லஉ)

இந்திரன்வா னவர்மூவ ரிறைஞ்சியேவல் செய்ய........௸
வென்னுளிருந் திடும்பெருமா ளெண்பாண்ட பெருமா...௸
ஞந்தமிலா ஞானப் படைவெள்ள முழுது...............௸
மானந்தப் படைவீடு முடையவெம் பெருமாள்........(௰௩)

எதிரின்றி யுலகேழு மினிதாளும் பெருமா...............௸
னியானெனதற் றிடவெனக் கெளிவந்த பெருமாள்.........௸
சதுமொன்று மனத்தார்க்குச் சலஞ்செய்யும் பெருமா.....௸
டவராச ராசர்தற் சுரூபமாம் பெருமாள்..............(௰௪)

முழுதுமா மடியன்பர் முடிசூட்டும் பெருமாள்............௸
முதலிடை முடிமூவ ராண்டெழுதிய பெருமா...............௸
ஞழுமன்பி லெவருள்ளத் திருவாகும் பெருமா.............௸
ஞழகாருஞ் சிவப்பிர காசமாம் பெருமாள்...... .......(௰௫)

சித்தமன் டபத்தன்பாந் திகழ்சிங்கா சனத்தே.............௸
சிதையாத வறிவாகித் திகழ்ந்திடும் பெருமாண்............௸
மத்தனு மெனையுமோர் பொருளாகப் புவியின்...... ......௸
மனிதனுப் வலிந்தாட்கொண் டருளிய பெருமாள்.....(௰௬)

வலியாரு மெளியாரு மாய்வாரா வண்ணம்...................௸
வழுவாம னெறியன்பால் வளர்த்திடும் பெருமாள்.........௸
சிவபோது முவமெல்லாஞ் சிவமாக்கும் பெருமா.. .......௸
டேவரா சச்சிவப் பிரகாசப் பெருமாள்.......௰௭, ஆ-டு௧௭.

பெருமாள்



உ

கணபதிதுணை.

# அய-வது, முத்திரை.

அடி நான்காய்த்தம்மிலொத்துவந்த
இரட்டைக்குறள்வெண்செந்துறை.

செத்துப் பிறக்கக் கொடாதெங்கள் முத்திரை............❊
செம்பிற் செறிக்கப் படாதெங்கள் முத்திரை............❊
யத்தத்தி லுத்திர மாமெங்கள் முத்திரை........ ....... ....❊
யாலின்கீழ் நால்வர்க் கரன்சொன்ன முத்திரை...........(௧)

எண்ணி விலக்கிட் டிடாதெங்கள் முத்திரை........ .......❊
யெண்ணுவா ரெண்ணங் கடந்திட்ட முத்திரை........... ....❊
பண்ணி யழிக்கப் படாதெங்கள் முத்திரை.....................❊
பார்ப்பறப் பார்க்கும் பரஞான முத்திரை... ..... ....... (௨)

வெண்ணூலிற் கோவைப் படாதெங்கள் முத்திரை.........❊
வேதமா நூலின் விளைக்கின்ற முத்திரை......................❊
பெண்ணு ளலாத பெருமான் றன்முத்திரை....................❊
பேசற் கரிய பெரியோன்றன் முத்திரை... .....௩, அ௨சா.

முத்திரை







# அய்க-வது,
# சுரூபானந்தசுவாமிகள்
# திருவெம்பாவை.

வெண்டளையான்வந்த-இயற்றரவிணைக்கொச்சகக்கலிப்பா.

எல்லையிலாப் பாவகத்தா லெத்தனையோ காலமுநான்...※
மல்கிய வல்வினையா மாயமலர்ப் பள்ளியிலே.......................※
புல்லித் துயின்று புரையாய பொய்ப்பிறவித். .....................※
தொல்லைக் கனவிற் றுயருழந்து சோர்வேனை......................※
யல்லிக் கமலத் தயன்மா லறிவரியான்................................※
கல்லைப் பிசைந்து கனியாக்கும் விச்சையினாற்................※
சொல்லற்று நின்று சுடரு முணர்வாக்கி...............................※
மெல்லத்தான் மிக்காணைப் பாடேலோ ரெம்பாவாய்...(க)

நில்லாத செல்வத்தை நித்த மெனுங்கருத்தாற்.....................※
பொல்லா விஷயத்தே புக்குறங்கு கின்றேனைச்.. .................※
சொல்வான் மனத்தாற் றொடர்வரிய நற்சிவம்வந்.................※
தெல்லே யெழிறிகழு மேனி யதுசாத்தி..... .........................※
நல்லாளோர் பாகனாய் நாதன் வலஞ்சுழியான்.....................※
வல்லாள னென்னை யெழுப்பி யுணர்வாக்கி........................※
யொல்லாத பாவனையி னுள்ளே யுறவழுத்தி...... .............※
யெல்லாங் கழற்றியவா பாடேலோ ரெம்பாவாய்.......(உ)

அஞ்ஞான மூடி யகல்கின்ற வாரிருளாம் .. ............ ..... ※
பொய்ஞ்ஞால மென்னும் புரையிற் றுயிலாதே........ ※
பைஞ்ஞா ணையானற் பார்ப்பதியோர் பாகத்தா..... ...※
னெஞ்ஞான முங்கடந்த வெந்தை வலஞ்சுழியான்............※
செஞ்ஞாயி றென்னத் திகழும்பொற் சேவடிக... .... .......※
ளஞ்ஞான மாய வெழுந்ததுகா ணாயிழையீர் ....... .........※
மெய்ஞ்ஞான மாகநமை வேதித்த மெய்யருளே ...............※
பஞ்ஞா வுவமுருகிப் பாடேலோ ரெம்பாவாய்...........(ங)

அறியாமை யென்று மழியாத மாயப்......※
பிறியா வினையினந் துஞ்சுதியோ பேதாய்......※
முறியாத வின்ப முழுவெள்ள மூன்றோன்......※
செறிவாரைத் தானாகச் செய்யும் பெருமான்......※
சிறியோமை யாண்டருளுந் தேசிகனாய் வந்தான்......※
வெறியார் குழல்மடவாய் வெய்யவிருண் மாண்ட......※
தறிவா யெழுந்ததுகா ணானந்த வெள்ளக்......※
குறையா நிறைவினையே கூறேலோ ரெம்பாவாய்......(௪)

கோதாடு மின்சொற் குதலைக் கிளிமொழியார்......※
வேதாவு மையலிலே வீழ்ந்தே கிடப்பவனை......※
ஞாதா வருஞ்சிவ ஞாதன் வலஞ்சுழியான்......※
பாதார விந்தப் பராவமிர் தம்பணித்து......※
மாதா வெனமுன்னி வந்தெடுத்தாட் கொண்டருளிப்......※
பாதாள மேழுக்கு மேனிலமும் பாவவையு......※
நீதா னெனவருளி நித்தமாந் தன்னிலைமை......※
யோதாமை யோதியவா பாடேலோ ரெம்பாவாய்......(௫)

மேன்மைகுலங் கல்வி விழுப்ப மெனுஞ்செருக்கான்......※
மானமெனு மையலுளே வாளா கழிவேனை......※
நான்மறைக ளோடரிய நற்சிவனே மானிடனாய்......※
வானவருங் காணு மலரடியென் சென்னிமிசைத்......※
தானமர வைத்துத் தமியேனை யாண்டருளி......※
ஞானமுடன் ஞேயமற ஞாதுருவு ஞானமழித்......※
தான முழுநினைவு மங்கே யறவிழுங்கித்......※
தான்முழுது மானவா பாடேலோ ரெம்பாவாய்......(௬)

மண்ணாகி வானாய் வளியா யெரிநீரா......※
யெண்ணாகி யெல்லா வுயிர்க்குயிராய் நின்றானை......※
நன்னாது நாயே னடையப் பிறவிதனிற்......※
புன்முடி வைத்த புழுவார் குரம்பையினின்......※
றென்னா தழிவேனை யெந்தை வலஞ்சுழியான்......※
கன்னா ரமிர்தன் கழல்காட்டி யாண்டருளி......※
முன்னே யுணர்வாக்கி யோர்வரிய பாவனையும்......※
பன்னா வழித்தானைப் பாடேலோ ரெம்பாவாய்......(௭)

முத்தவனை மூலத் தனிச்சுடரை முற்றமாஞ்............*
சுத்தவனச் சோதி சுருபானந் தக்கடலை.........................*
யெத்தன்மை யோருக்கு மெய்தரிய சேவடியை.... .... ....*
யித்தன்மை யோர்சிறியோ றென்னு தளித்தருளும்........*
பித்தனைப் பேத மபேத முபயமற.... ..........................*
வொத்துணர்வே யாக்கி யொழியா நிறைவளித்த.... ..........*
நித்தவனை நின்மலனை நீடொளியை நிற்குணனை......... .....*
யத்தவனை யாரமிர்தைப் பாடேலோ ரெம்பாவாய்........(அ)

தானே முழுதாய்த் தழைத்துமுத விற்சிதையா ...... ......*
வானோர் பெருமான் வலஞ்சுழியா னென்றென்றெ ........*
ஞானே யரும்பி விழுந்தெழுந் தோவலறேன்....................*
வானேரு மண்ணோரு மற்றெவருந் தாமறியாத்... ..........*
தேனார் மலரடியென் சென்னி யினிற்பொறித்துத்........*
நானாகி நின்ற நடுவு நிலையழித்துத்................. ..............*
தேனே யமிர்தமே கன்னல்சே ரின்சுவையே......... .... ....*
கோனேயாய் நின்றவா கூறேலோ ரெம்பாவாய்.........(௯)

கல்வியெனும் பல்கடலிற் கானலமீர் தம்பருகி...... ..........*
யெவ்வையில் பல்சமயத் தெய்த்தே கழிவேனை.......... ....*
யவ்வலறத் தன்கருணை யாரமிர்தத் துள்ளமுத்தி............*
நல்ல மலர்ப்பாத நாயேற் கினிதளித்துச்........................*
செல்ல லறத்திருத்தித் தேற்றி யுணர்வாக்கி ... ................*
மெல்ல வியோமத் தழுத்திமிகு வேதகத்தே............ . ....*
செல்ல வளித்த சிவபெருமான் றன்கருணை.... ...... .......*
யெல்லை யிலாதவா பாடேலோ ரெம்பாவாய்..............(௰)

கற்போது நெஞ்சங் கரையக் கருதரியா........ ...............*
னிப்பா லுருவாகி யென்னுட் புகுந்தருளித்....... ...........*
தற்பாற் படுத்திச் சதுரழித்துத் தானெனக்குச்............*
சொற்பான் மனப்பாற் சுருதிப்பா லென்றியம்பு...........*
மப்பாலைக் கப்பாலவ் வானந்த மாக்கியவப்............ ....*
பொற்பே நிலைந்து பதைத்தலறிப் போதகன........... ..*
வப்பா வடியேனை யாண்டசுரு பானந்தா.......................*
வொப்பாரி லாதாயென் றூடேலோ ரெம்பாவாய்...... (௰௧)

